உ

*Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith."*

*"Seek Truth wherever you find it." But,*
*"Make your Choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**Speak the Truth.**

"HITCH YOUR WAGON TO A STAR". "TO THINE OWN SELF BE TRUE".




*அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்சத்.]* [God is Love. Knowledge is Power. *Aum.*

ஸத்யமே ஜேயம்—**Satyameva Jayati.**

பு. **18.**] **1910**ஞு ஏப்ரல்-மேமீ, சாதாரணஞு சித்திரை-வைகாசிமீ [ச. **1-2.**

# THE NEW YEAR & THE OLD.

## *A Tale of Self Experience.*

### The Singing Heart & The Testing Rod.

THE SINGING HEART.

I spoke a traveller on the road
Who smiled beneath his leaden load,
" How play you such a blithesome part?"—
"Comrade, I bear a singing heart?"
I questioned one whose path with pain
In the grim shadows long had lain,
"How face you thus life's thorny smart?"—
"Comrade, I bear a singing heart!"

I cried to one whom adversity
Could not make bend the hardy knee,
"How such brave seeming? Tell the art!"—
"Comrade I bear a singing heart!"
Friend, blest be thou if thou canst say
Upon the inevtiable way
Whereon we fare, *sans* guide or chart,—
"Comrade, I bear a singing heart!"

—CLINTON SCOTLAND IN The *Independent.*

# புதுவருஷப்பிறப்பு.

"பட்டால் தெரியும் பார்ப்பானுக்கு".

மோனகானகிருஷ்ணனும் தீனமானசனியனும்.

" பழையனகழிதலும் புதியன புகுதலும்
வழுவலகாலவியல்பினனே. "

ஸௌம்மிய வருஷம் கழிந்தது. ஸாதாரண வருஷம் பிறந்தது. சென்ற வருஷத்தில் நாம் படாதபாடும் பட்டுக் கெடாதபடியெல்லாம் கெட்டோம். "பட்டால் தெரியும் பார்ப்பானுக்கு" † என்னும் வசனம் நம்விஷயத்தில் உண்மையா யிருந்தது. ஏழரைநாட்டுச்சனி ‡ எம்முள் புகுந்து ஆட்டின ஆட்டத்துக்கெல்லாம் ஈடுபட்டிருந்தோம்.

'பதியிழந்தனம் பாலனை யிழந்தனம் படைத்த
நிதியிழந்தன மினிநமக் குளதென நினைக்குங்
கதியிழக்கினுங் கட்டுரை யிழக்கிலே மென்றான்
மதியிழந்துதன் வாயிழந் தருந்தவன் மறைந்தான்.'—

என்றபடி, அரிச்சந்திரன் அண்டத்திற் பட்டபாடெலாம் பிண்டத்திற் பட்டுத் தீர்த்தோம். அன்னையாமவ ளங்கமெல்லாம்நொந்து அவலோடு பெற்றெடுத்த அழகு பொருந்திய தேஹமாம் 'பதியை'த் தாபஸாக்கியினால் கொளுத்தி 'மன்மததஹனம்' போல் அது சாம்பலாகப் போகக் கண்டோம்.

"கர்மத்தைச்சுட் டெரிக்கா நாயேன்
காயத்தைச்சுட் டெரிதீ கண்டேன்
காயத்தைச்சுட் டெரிதீ கண்டும்
காமத்தைச்சுட் டெரிதீ காணேன்
காமத்தைச்சுட் டெரிதீ கண்டால்
கர்மத்தைச்சுட் டெரிதீ காண்பேன்
கர்மத்தைச்சுட் டெரிதீ கண்டால்
காயத்தைச்சுட் டெரித்தே னவேன்."

† "ஸ்வானுபவத்தாலன்றி அபரோக்ஷஞானம் சித்திக்காது" என்பது இதன் பொருள்.

‡ மூன்றரைச் சுற்றுள்ளது குண்டலினிபோல், ஏழரைச்சுற்றுள்ளது 'அசுத்தமனமாம்' சனி. அசுத்த மனம் காமங்களை சங்கல்பிக்கும் என்பது சுருதி வாக்கு.

என்னும் குண்டலினியோக விதியை யனுசரித்துக் காயத்தைச் சுட்டெரித்துக் "காமதஹனமாம்" கண்கொள்ளாக் காட்சியைக்கண்டனுபவித்தோம். காமக்குரோதலோபமோஹமதமாச்சரியங்களுக்கெல்லாம் இருப்பிடமான கட்டழகனும் " காமனை யுகந்த கண், ஆரை யுகப்பது " "தாய்மொழி வாசகம் சொல்லுமினீரே!" தேகம் 'சாம்பலாகப்போகக்கண்டது' எப்படி யென்பீரோ, கேண்மின்!

" காயத்தைச்சுட் டெரித்தே யானும்
காமத்தைச்சுட் டெரிதீ யானேன்
காமத்தைச்சுட் டெரித்தே பின்னும்
கர்மத்தைச்சுட் டெரிதீ யானேன்
கர்மத்தைச்சுட் டெரித்தேன் காணினிக்
காயத்தைச்சுட் டெரிதீக் கஞ்சேன்!
கர்மத்தைச்சுட் டெரித்த நானே
காயகல்ப விபூதி யானேன். "

" விபூதியான நான் " விசுவகர்மா மயன் செய்த வேலை யெல்லாம் செய்யக் கற்றேன். எப்படி யென்பீரேல், கேண்மின்:—

ஒன்பது வாசற் குச்சைக் கொளுத்திக்
கோமயத் தாலதை வெண்ணீ றாக்கி
ஐம்பதும் ஒன்றுமாய் அதனுள் வசித்த
வர்ணங்கள் சேர்த்துத் திருநீ றாக்கி
எண்பதும் ஒன்றுமாய் விளங்கு பதத்தை
வேரோடு கல்லித் திரவமாய்க் காய்ச்சி
மந்திரம் பதினொன் றாலேமாயச் சாந்தகூட்டி
நவசக்ரக் கோட்டைநிர் மித்தவகை யறியீரே!

நவசக்ரக்கோட்டையை நிர்மித்தபின்னர் நந்திதன்னருளாற் "பாலனையிழந்தனம்."

" ஆபாலகோபவிதிதாயை " யானவென் அம்பிகை யருளால் ஆத்மானுசந்தானம் முதிரவுந்தானே, முன்செய்வினையால் "படைத்ததோர் நிதியிழந்தனம்." இப்படியாகப், "† பதியிழந்து " நாம் " ‡ பாலனையிழந்து " பின், "படைத்ததோர் § நிதியிழந்து" பாரினிற்பட்டதோர் துன்பங்களைச் சொன்னோம்.

" இனிநமக்குளதென நினைக்கும் ¶ கதியிழக்கினும் கட்டுரையிழக்கிலேம்" என்றுமே

† பதி-தேஹம்; ‡ பாலன்-தற்போதம்; § நிதி-கர்மம்; ¶ மோக்ஷகாமியம்; கட்டுரை-ஸத்யம்.

உன்னி, உண்மையைப்பற்றி உள்ளத்தே யாய்ந்து, உள்ளத்தை யுள்ளபடி உள்ளத்தேபற்றி, கள்ளமனமது கரைந்தேபோக, உள்ளமனமது முருகியே தெளிய, தெளிந்ததோர்மனமும் பளிங்கு போல் ஸ்படிகலிங்கமா யுறைந்த வம்மனதில் ஜோதிர்லிங்கத்தை ஜ்வலிக்கஇருத்தி, ஆதிபராசக்தி அம்மை பூர்வத்திலே, "ஞான ஆனந்தமயிலாகத்" தோன்றிப், பரம்பொருளா மந்தப் பேரின்பசுகத்தைப், பெறுதல் வேண்டிப் பூஜைமிகச் செய்த, புண்யஸ்தலமாம் † புநிதபூமியில், தேவியைத் தொழுது திவ்ய யாகம் செய்து, ஆவியையொடுக்கி அருந்தவங்கள் புரிந்து, பூர்வவாசனைப்புண்யபலத்தால், கர்வமழிந்து கிருதகிருத்தியனுகி, இருக்குந் தருணத்தில் "ஏழரைநாட்டான்," ஆட்டின கூத்தெல்லாம் போதாதென் றென்னுள்ளே, பாட்டிகதைகளைச்சொல்லித் திரியுமோர் பழம் பெருச்சாளியாய் வந்துதித்தானே!

பெருச்சாளியானவன்பேச்சை நான் நம்பி, குருபரன் பாதத்தை யுள்ளத்தேயிருத்தி, கருமுகில்வண்ணத்தன் காரிருள் போக்குவன், ஸ்ரீகிருஷ்ண மூர்த்தியாம் அன்பினிற் கன்பன் என்றுமே சொல்லித்திரிந்த வச் சனியனை, ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியாத்தெரிசிக்கப்போனேன். அன்பானவார்த்தைகளைத் தன்பாக எண்ணி, அகண்டபரி பூரணத்தைக் கண்டதுண்டம் செய்து, ஆலஹால விஷம்போலும் உயிர் வாங்கு வார்த்தையை, ஆத்திரப் பட்டவன் சாத்திரம்பேசி, சூத்திரப் பொம்மைபோல் ஆடினுன் கூத்தை. சத்திய - பத்திய உண்மையைச்சாதனை செய்திரோ வென்கவும், 'சத்தியமாவது! சாதனையாவது! சத்தியம் நாசமாப் போகவே!' யென்றான்.

சத்திய-நாச காலனைக் கண்டு நான், 'நமக்குளதெனநினை' கதிமிகக்கலங்கினன். கதிகலங்கவும் கண்ணது கலங்கிக், கண்ணீர் தாரையா வொழுகவுமாச்சுது! ஒழுகிய கண்ணீரைக் கண்டவன் கலங்கிப், பழுதானவார்த்தையைப் பரிகரித்தேனென்றான்.

வாக்குக்கதிஷ்டானம் வாணியேயானு அம், வாக்குப்பிறந்தது வந்நியிலிருந்தே! வந்நியிற்பிறந்த வாக்கை யறிந்தவர்க் கந்நியமான தோ வந்நியி லக்நி! அந்நியமில்லாத வச் "சித்-அக்கினி" தன்னைத் தன்னிலேவைத்து வளர்க்குமோர் சித்தரை வாக்கினுல்சுட்டேபின் வாய்மதம்பேசினுல், சுட்டசூடாறுமோ வாய்மதப் பேச்சினுல்? உண்மையை நிந்தித்த வத் தன்னயவிஷமென்னுள் செய்ததோர் துவம்ஸத்தை யென்னென்று சொல்லுவேன்!

காட்டுத்தீபோ லது பற்றி யெரிந்தது; காடுவனமெல்லாமழித்துத் தஹித்தது; த்வக்குத்தோலெல்லாம் உருகவெரித்தது; மயிர்க்காலெல்லாம் ரணமாகச்செய்தது; பக்குவமான தாதுவையெல்லாம் கக்கிக்கொண்டெரித்தது அக்னித்திரவம்போல்; உள்ளமெரிந்தது உடலுமெரிந்தது;கள்ளமனமதுங்கருகவெரிந்தது! கொப்புளித்துள்ளே குமுழியிட்டது தொப்புளுக்கிடையே தோன்றிற்று முத்தாய். ஏழரைநாட்டுச்சனியன் என்னைப் படுத்திய பாட்டையென்னென்று சொல்வேன்! ஏழரைவருஷமாய் என்னைப்பிடித்துப் படுத்தியபாடெல்லாம் போதாதென்று உள்ளத்தில் நுழைந்து கள்ளத்தனமாய், மெள்ளவென்னறிவாம் தற்போதத்தையும் கொள்ளையிட்டது காண் கூ கூ! முறையோ!

அண்டத்தில் ஏழரைவருஷ மது, ஆட்டின கூத்தெல்லாம் போதாதென்று, பிண்டத்திற்புகுந்து ஏழரை நாளில், கண்டங்களுக்கவே செய்தது சனி காண். கார்க்கோடான் விஷந்தலைக்கேறிய நளன்போல்,உருத்தெரியாமலே செய்தனன் சனியெனை! ஏழரைநாளி லோரேழரைநாழிகை பட்டதோர் பாட்டையா னென்னென்று சொல்லுவேன்! அதிலுமேழரை நிமிஷ மெனக்கு ஏழரையுகமாத்தோன்றியதப்பா! தோன்றிய ஏழரை நிமிஷத்தி லொன்றைத்

† திருமயிலையில்.

தேர்ந்தெடுத் துள்ளே வைத்துக் கொண்டு நான், மாத்திரைக் கணக்கால் அளந்து பிரித்ததை, "அரைமாத்ரை" யளவு எடுத்துக் கொண்டேன். இந்த அரைமாத்ரை யளவாம் காலத்தை யன்றி, வேறொன்றையும் நான் கண்டறியேன் ஸத்தியம்!

நாடுநகர் வீடுவாசல் பெண்டுபிள்ளை யெல்லாம் விட்டு, ஓடித்திரியவே ஓட்டிய சனியது, பாடுபட்டு 'நான்' தேடிவைத்ததோர் பொருளையெல்லாம் பரித்துக்கொண்டு, பரதேசியாயென்னைப் பாரினில் விட்டுப், பார்த்ததொன்றுமே போதாதென்று, ஒடுங்கையுமாத்துரத்தவெண்ணியென் னுள்ளறிவையுங் கொள்ளை யிடவே பார்த்தான். என் அன்பிற்கன்பாய் அறிவுக்கறிவாய், என்னுள்ளிருந்தே யெனையாண்டான், என்றன்னைத் துடைத்துத் தூய்நெறி காட்டுவான், அன்பால் என்னஹத்தே வந்துமே யுதித்தான்.

'பதியிழந்து' நான் 'பாலனையிழந்து' மதியிழந்து பின் கதியுமிழந்து, பொருளிழந்து மருளிழந்து, புண்யபாபமிவையிழந்து, இழக்கவேண்டியதெல்லா மிழந்து, நானெனதெனுமோரறிவு மிழந்து, பித்துப்பிடித்துப் பேய் போலாகி; இத்தனை கோலமுங் கண்டுபின்னர் மத்துப் பிடித்து வெண்ணெய் கடையும், மாதிரிடை விளை யாடித்திரியும் வீணன வீணனும் வேணுகோபாலனை, வேண்டித் தவம் செய்ய வைத்தானே சனி. "கெடுத்தசனி கொடுப்பான்" என்பார்; "கொடுத்தசனி கெடுப்பான்" என்பார். "அரைமாத்ரை"யளவு காலமேவைத்து, அத்தனையுங்கெடச் செய்தசனியவன் கொடுத்ததோர் பாக்கியத்தைக் கண்டீரோ நீங்கள்! படுத்திய பாட்டையும் கேட்டீரோ! சொல்லுமின்.

*'பச்சிமவாஹிநி' யெனுமாறு; தலைகாலா மாறி யோடு மது. பச்சிமவாஹிநி யாற்றங்கரையினில் பாரதோ நிற்கிறான் கோபாலன். மாடுமேய்ப்பது அவன் தொழில்காண்; கையில் ஆயக் கோலுடையான். ஆயக்கோலை நீ ஆய்ந்து பார்க்கில், அதுவும் பல்துளைவேணுவே காண். வேணுவைக் கொண்டவன் கானத்தை மூட்டுவான்; விசுவமெல்லா மதில் லயிக்கச் செய்குவான். ஆடச்செய்வான் பாடச் செய்வான், கூடிக்கொண்டு குதிக்கவும் செய்வான். ஓடச் செய்வான் ஒடுங்கச் செய்வான், இன்னிசையுள்ளே பதியச்செய்வான், பதியச் செய்வான் இதயத்துள்ளே இன்னிசைநாதம் விளங்கச் செய்வான். விளங்கச்செய்வான் நாதம்உள்ளே நாதத்துள்ளே த்வனியை வைப்பான்! நாதத்தைக் கிளப்பி த்வனிக்கச் செய்வான், த்வனியினுள்ளே ஜோதியை வைப்பான்! த்வனியைக் கொண்டு ஜோதியை மூட்டுவான், ஜோதியினுள் மனப் பாம்பை வைப்பான்! ஜோதிக்குடத்திலே பாம்பை யடைப்பான், பிடாரனுய்த் தானுமே நின்றதை யாட்டுவான்! ஆட்டுவான் பாம்பை, மீட்டுவான் நாதத்தை; நாதத்திலிருந்துமே பின், கானத்தைக்கிளப்புவான். கானத்தைக்கொண்டு ஜோதியை வளர்ப்பான், ஜோதியைக் கொண்டந்தப் பாம்பை வளர்ப்பான். குட்டிப்பாம்பைக் கோடியாச் செய்குவான், கோடிப்பாம்பை அனந்தமா நீட்டுவான். அனந்தமான பாம்பையாட்டி ஆதிசேஷனுச்செய்துமே வைப்பான்! சேஷநாகப் பணாமுடியில் தன் மாணிக்க வொளியை விளங்கவே வைப்பான். விளங்கவேவைப்பான் களங்கமதற்றால், உளங்களிப்பானவன் உள்ளிருந்துண்மையில்; களங்கமுற்றுத்தான் உளங்கசிந்தோமாகில், காளிங்கமர்த்தனம் செய்துமே வைப்பான்; செய்து வைப்பானவன், கொய்துமே வைப்பான், சங்கு சக்ர பாணியாய்த்தோன்றி; மதம்பிடித்துள்ளே ஹிதமழிந்தால் பின் கதையால்வதை

* குடகுமலையில் உதித்து மேற்கேயிருந்து கிழக்குமுகமாய் ஓடும் காவேரிநதி மைசூரில் ஸ்ரீரங்கப் பட்டணத்தண்டை வரும்பொழுது அந்தர்முகமாய்த் திரும்பிய யோகி மனம்போல், கிழக்கேயிருந்து மேற்குமுகமா யோடும் பாகத்திற்கு பச்சிமவாஹினியென்று பேர். அங்கே ஸ்ரீவேணுகோபாலர் ஆலயமொன்று இருக்கிறது.

யும் செய்துமே வைப்பான்; உருவ நாசமுற்றவர் தமக்குத் துருவன் முன்போல் வந்துமே நிற்பன். அருவநாச முற்றவர்க்குள்ளோ அன்பேயாகி யுடன்கலப்பன்.

உருக்குலைத்தென்னை யோட்டிவிட்ட சனியை யென்னசெய்வேனையகோ! கைப்பிடித் தடித்த பிரம்பு தடித்தால், பிரம்போ கண்ட தண்டஞ் செய்வது? அண்ட பிண்ட மிரண்டிலும் அவனே காரணகாரிய தோரணமாகுவன். பிரகிருதி விகிருதியா விளங்குநற் சனியைப், பாரிலுள்ளோர் அறிவார்களோ! சுகிர்த-விகிர்த மிரண்டும்செய்யும் சூன்யபுருஷனை யாரறிவார்?

காலதத்துவத்தைக் கடந்துமே சென்றோர், காரண-காரிய தோரணை யறிந்தோர், ஆரண பூரண சாரணர்கள்தாம், பூரணதத்துவ ஞானியர்கள், காலவஞ்சனம் செய்தவர்கள், கர்ம யோகத்தைக் கடந்தவர்கள், ப்ரபத்தி பூரண காரணர்கள், அத்யாத்மயோக ஸம்யமர்கள்,— இவர்களையன்றி சனியின் பெருமையை இகத்திலுள்ளோர் அறிவார்களோ! மஹத்துக்கள் புகழ் சனியின் மகிமையை மாதவர் அல்லோ உணர வல்லார்!

‘அர்த்தமாத்ரை’ யளவையுள்ளது பிந்துவிருக்கும் ஸ்தல மல்லவோ! அதினிற்பாதி அர்த்தபிந்து; அதனிலும்பாதி ரோதினி! ரோதினியிற் பாதி நாதமாம்; நாதத்திற்பாதியே நாதாந்தம்! அதனிற்பாதி சக்தியென்பர்; அவளிலும் பாதி வியாபிகா! அவளிலும்பாதி ஸமானு; ஸமானுவிற்பாதி உன்மனு! உன்மனுவைக் கூறு போட்டுப் பார்க்கவோ, உண்மையில் அவளிடம் ஒன்றுமேயில்லை பாரப்பா! ஒன்றுமில்லாத உன்மனுவஸ்தை உபாதியற்றதென்று கொள்க! உபாதியற்ற உன்மனு தாண்டினுல் நிருபாதியான ‘காமகலா’. காமகலாவைக் கண்டறிந்தவர் கிருஷ்ணப்ரேமையில் ஒரு துளியறிவார். பலதுளி கூடிப் பெருவெள்ளமானுல் ஸ்ரீகிருஷ்ணலீலை செய்பலாகும்! ஸ்ரீகிருஷ்ணன் லீலை செய்யப் பெற்றுலோ, ஹரிசகோதரியாம்தேவி பாதசேவை சித்திக்கும்கெட்டி, சின்மயானந்தரே யுள்ளறிவீர்! சுருதிலயந்தானே ஹிருதயமத்தியில் உள்ள தஹராகாசத்தில் மோன-கானமாகும்.

“மோனகுரு நாதர் நட மாடிவரு சீலமுறு
கானமிகு நாதவொலி கேட்டெழுந் துணர்வினுள்ளே
ஏனமிலா சோதியரு தரிசனங் காண்டு கொள்வான்
ஈனமிலா வானநிறை வாயுதனி லலைந் துரைந்து
தீனமுடை நெஞ்சனுய் வட்டமிட்டதனுளொரு சக்
[கரக் கோட்டை கட்டி
மானமுட னபிமான சாரமது உண்மையினி லுள்ள
[படி விட்டரைத்து
ஏனமிசை குயவனவன் கைப்பிடிக் கிசைந்து வனை
[திருகை மண்ணுய்
வானமிசை விரிசடையோன் கைப்பிடியில் அஹமு
[மவன் மயமேயாகி
மோனவுரு வானவொரு வதிர்சயம் காண்டுகொள்
[அன்பிலமுதே!”

ஓம் ஸ்ரீ கிருஷ்ணுயநமஃ.

---

## நமது கையொப்ப நேசர்க்கு அறிக்கை.

இந்த சஞ்சிகையோடு விவேகசிந்தாமணியின் 18 - வது வால்யம் துவங்குகிறது. 17 - வது வால்யத்துக்கு சந்தா பாக்கியுள்ளவர்களெல்லாரும் நாம் கோறியபடி சித்திரைமீ பிறக்குமுன்தானே அவரவர்பாக்கியை அனுப்பாமையால் தாமதம் நேரிடலாயிற்று. பாக்கியுள்ளவர்களுக்கு தனித்தனியே நச்சி நச்சிக் கடிதமெழுதுவது சாத்தியமாயில்லை. ஆகையால் ஒருதரம் எழுதப்பெற்றோர் இஃதையே ஞாபகமூட்டும் கடிதமாகக்கொண்டு பாக்கியை யுடனே அனுப்பிவிடக் கோறுகிறோம். மாவில்லாமல் பணியார மாகாதுபோல் பணமில்லாமல் பத்திரிகையை அச்சிட்டு கைச்செலவு செய்துகொண்டு அனுப்புவது யாருக்கும் துர்லபமே. இதை யெல்லோரும் ஹிருதயத்தில் வைத்தொழுக வேண்டுமாய்ப் பிரார்த்திக்கிறோம்.

பத்திராசிரியர்.

## THE FUNCTION OF JOURNALISM.

"High is the function of journalisam. The Editor ought really to be the great Teacher of the general public, the holder of the torch of Truth and unbending chastiser of those who go astray." The high ideal desirable is thus defined by a celebrated writer:—

2. "Adherence to conviction can and should be taught by precept and example as not only a high principle but sound policy."

3. "The editor, the real 'Journalist' of the future, must be a man of such known integrity that he will be above the suspicion of writing or editing against his convictions. He must be known as one who would resign rather than sacrifice his principles to any business interest."

4. "*To sell the mind for money is a greater sin than to sell the body.*"

5. "*As to Papers*:—Above knowledge, above news, above intelligence, the heart and soul of a paper be in its moral sense, in its courage, its intergrity, its humanity, its sympathy for the oppressed, its independence, its devotion to the public welfare, its anxiety to render public service." And this soul becomes contaminated if it is sold to an individual, or a group, or a party or sect, or to the powers that be.

6. "*The Secret of Success*—To think rightly, to think instantly, to think incessantly, to think intensely, to seise opportunity when others let them go by—this is the secret of Success in Journalisim".

## பத்திரிகாதர்மம்.

"ஆசிரியர் விருது."

"ஆராலு மென்னை யமட்டவொண் ணாதினிச்
சீரார்பிரான் வந்தென் சிந்தை புகுந்தனன்
சீராடி யங்கே திரிவதல் லாதினி
யார்பாடுஞ் சாரா வறிவறிந் தேனே."—திருமந்திரம்.

"பணிந்து நின்றேன் பரமாதி பதியைத்
துணிந்துநின் றேனினி மற்றொன்றும் வேண்டேன்
அணிந்து நின்றேனுட லாதிப் பிரானைத்
தணிந்து நின்றேன்சிவன் தன்மைகண் டேனே."—
[திருமந்திரம்.

"பத்திரிகாதர்மம்" என்பது இத்தேசத்திற் புதிதாயுண்டான ஸ்தாபனமூலமா யேற்பட்டதென்பர். பத்திரிகைகள், அச்செழுத்தால் அச்சிடப்பட்டு எங்கும் வியாபித்துத்திரிவது சென்ற இருநூறு முன்னூறு வருஷங்களுக்குள் உண்டாகி விருத்தியானதே. பத்திரிகை புதிதாயுண்டானதாயினும் அது ஆத்மதர்மத்துக்குவேறானதல்ல. ஏனெனில் பத்திரிகையின் லக்ஷியத்தை யாராய்ந்தால் அதுவும் ஆத்மார்த்தமானதேயென்று நன்றாக விளங்கும். பத்திரிகாலக்ஷியத்தைப்பற்றி ஆங்கிலேயவித்வான் ஒருவர் எழுதிவெளியிட்டிருக்கும் உயர் பாவத்தை இதன் முகட்டில் இங்கிலீஷில் தானே அச்சிட்டிருக்கிறோம். அந்த மஹானுடைய லக்ஷியார்த்தம் பத்திரிகைகளுக்கு அமையப்பெறின், "பத்திரிகாதர்மம்" ஸநாதந தர்மத்தில் சேர்ந்ததாய்விடுகிறதென்பதிற் சந்தேகமில்லை.

பூர்வத்தில் ப்ரஹ்மவித்துக்கள் லோகோபகாரமாய்ச்செய்துவந்த கடமையெல்லாம், பத்திரிகாசிரியர்கடமையாகக் குறித்திருக்கிறார்.

இது மெய்யே. ஏனெனில், பத்திரிகை வயிற்று வளர்ப்புக்காக ஏற்பட்டதல்ல. பொதுஜன விர்த்திக்காக வேற்பட்டதே. பொதுஜன க்ஷேமத்தை நாடி ஜனங்கள்பொதுவாய் நற்கதியடைய உழைப்பவர்கள் சமஷ்டி வித்தையில் தேர்ந்தவர்களாயிருக்கவேண்டியது அவசியம். வியஷ்டிபாவம் முதிர்ந்து பழுத்தாலன்றி சமஷ்டிபாவம்முளைக்காது. அஃதாவது ஜீவபாவம் பழுத்து சிவபாவம் உண்டாக வேண்டும். 'தேஹோஹம்' என்கிற பாவனையுள்ளவன் மூடன். அவன் "முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்கள்" இனத்தைச் சேர்ந்தவன். அது விட்டு "ஜீவோஹம்' என்னும் பாவம் சித்திக்கப் பெற்றவன்மனிதன். அஃதாவது அவித்யா சம்பன்னன். இவன் பேதபாவம் முதிர்ந்தவன். வியஷ்டிவித்தையொன்றே யிவனுக்குவரும். இதிலிருந்து முதிர்ந்து ஜீவேசுவரபேதம் 'பொய்' (அஃதாவது, 'கற்பனை') யென்று கண்டவன் சமஷ்டிவித்தைக்கருகனாகிறான். அவன் ஜீவபாவத்தைவிட்டு, "சிவோஹம்" என்னும் பாவம் நிறைந்தவனாகிறான். "சிவோஹம்" என்னும் எண்ணம் தடித்து உள்ளம் துடிக்க அது உயிர்பெற்றெழுமானால் அப்பொழுது "சிவோஹம்" என்னும் எண்ணம் மந்திரரூபமாக வுயிர்த்தெழுவதாகிறது. அப்படி உயிர்த்தெழுங்கால், 'சிவோஹம்' என்பதிலுள்ள எழுத்து, பதம் எல்லாம் நழுவிப்போய், அதன் நாதம் மட்டும் ப்ரமரகீதம்போல் (வண்டின் ரீங்காரம்போல்) மனத்திலிருந்து உள்ளத்துணர்வாய் ஒலித்துக் கொண்டிருக்கும். அந்தஸ்திதிக்கு வந்துவிட்டால் அதற்கு "ஸோஹம்பாவனை" யென்று சொல்கிறது.

கலை, தத்துவம், புவனம், எழுத்து அல்லது வர்ணம், பதம், மந்திரம் என இவ்வாறும் ஷடத்துவாக்கள். உலகானுபவம் இப்படி அறுவகைப்பட்டு அறுவிகாரங்களால் விளங்கும். இதில் எழுத்து, பதம், மந்திரம் இம்மூன்றும் "சொல்லிலக்கணம்"— வாக்கின் லக்ஷணம் என்று சொல்லலாம். புவனம், தத்துவம், கலையிம் மூன்றும் "சுவடியிலக்கணம்"—முதல் மூன்றும் பூரணமாய் விளங்குவதற்கு ஆதாரபூதமாக விருப்பது சோல்லாம். சொல், சுவடி—இந்த இரண்டும் வியஷ்டி, சமஷ்டியென்னும் பாவங்களுக்கு அறிகுறியடையாளமாக நிற்கின்றன. சொல் அல்லது வாக்கு என்பதில் எழுத்து, பதம், மந்திரம் என்னும் மூன்றுறுப்புகளு மமைந்திருக்கும். உதாரணமாக அ என்னும் முதலெழுத்தை யெடுத்துக் கொண்டு பார்ப்போம்:—

(1) அ என்பது வடிவில் முதலெழுத்து. (எழுத்திலக்கணம்).

(2) அ என்பது ஒலிக்கில் ஸ்வரம் ஆகிறது. (இது அ என்பதின் பதார்த்தம் அல்லது சொல்லிலக்கணம்).

(3) அ என்னும் ஸ்வரத்தை நீட்டிக்கொண்டேபோனால் அது அநுஸ்வாரமாம் மோனத்திற் புகுந்து "அம்" என்னும் மந்திரமாகும்.

இந்த அம் என்னும் மந்திரத்தின் திரிவிதமான வியஷ்டிலக்ஷணத்தை, சமஷ்டிலக்ஷணமாம், புவனம், தத்துவம், கலை யென்னும் மேலத்துவாக்கள் (மேலேபோம்வழி) மூலமாகப் பார்க்கில் அது எங்கே போகிறது பார்ப்போம்:—

அம் என்னும் மந்திரத்தை உள்ளபடி தியானித்து அதன் தியேயாகாரத்தைக் கிளப்பினால் அது புவனங்களையெல்லாம் கரைத்து ஒன்றாக சமஷ்டிரூபப்படுத்தினது போல் 'அமிர்தாகர்ஷணி' யென்னும் அதிர்ஷ்டானதேவதையைக் காட்டிவிடும். (இது தான் புவனலக்ஷணம், அஃதாவது 'அம்' என்பதின்லோகார்த்தம்).

புவனத்தில் (லோகாந்தரத்தில்) அமிர்தாகர்ஷணியாக விளங்கும் 'அம்' என்னும் லோகாந்தரபாவத்தைத் தத்துவார்த்தமாகப் பார்க்கில், அது நாதமுதல் பிருதிவியீறாகவுள்ள 36

தத்துவங்களும் பொருந்தப்பெற்றதாக விருக்கக் காணலாம். இது யோகிகளுக்கே சாத்தியமானதால் இதைப்பற்றி யிங்கு அதிகமாய் விவரிக்க நிமித்தமில்லே.

தத்துவங்கள் 36-ம் 'அம்' என்னும் மந்திர பீஜத்தில் அடங்கி யிருக்கக்கண்ட யோகி அவைகளை யெல்லாம் ஒன்றாகப்பாவித்து அதன் மூலத்தைவிசாரிக்கப்புகுங்கால் தத்துவார்த்தத்தில்(தத்துவலக்ஷணத்தோடு 'துவந்துவமாய்' - 'அது நீ' என்று இரட்டையாய்ஜோடி சேர்ந்துவிளங்கிய)அம் என்னும் ஸ்வராநுஸ்வரங்களிரண்டும் "சுருதி-லயம்" என்கிற சமஷ்டி தத்துவமாகமாறி அதன் த்வந்த்வ நிவர்த்தியில் நிவிர்த்திகலேயாகத் தரிசனமளிக்கும்.

இந்த நிவிர்த்தி கலையைப் பிடித்து ஆராய்ந்தால் இது ஐந்துகலேகளாகப் பிரிந்துகாணும். அஃதாவது (1) நிவிர்த்தி, (2) பிரதிஷ்டை, (3) வித்தை, (4) சாந்தி, (5) சாந்தியதீதை.

இந்த ஐந்துகலேகளும் சமஷ்டிஸ்வரூபமேயான "ஆதிபகவன்". இவ்வளவையும் சித்த புருஷரும், தத்துவஞானியுமான தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனர் ஈரடிக்குறள் ஒன்றில் கூடமாய்ச் சொல்லி முடித்துவிட்டார்.

" அகரமுதல வெழுத்தெல்லாம்
ஆதிபகவன் முதற்றேயுலகு."—திருக்குறள்.

உலகிலுள்ள கிரந்தங்களெல்லாம் அமுதலான வெழுத்துக்களாலாகி அவ்வெழுத்துக்களின் விகாரமேயன்றி வேறல்ல. அப்படியான அந்த கிரந்தங்களுக் கெல்லாம் முதலாக (மூலகாரணமாக) விருப்பது "அகரம்" (அ- என்னும் சப்தம்: இதை ஸம்ஸ்கிருதத்தில் ஸ்வரம் என்பர்). இது வியஷ்டிபாவம்.

அஃதேபோல, புவனமுதலான சமஷ்டிபாவ சிருஷ்டிக ளெல்லாம் "ஆதிபகவன் முதற்றே"—ஆதியாயுள்ளபகவானை முதலாக(மூலகாரணமாக) வுடையது. இந்த ஞானம் பெற்றவருடைய தன்மையைத் திருமந்திரம் ஓதிய திருமூலதேவர் " அணைந்தோர் தன்மை" யென்னும் தலேப்பின்கீழ் சொல்லி யிருக்கிறர். அதிலிருந்து இங்கே நாமெடுத்துக்கொண்ட "பத்திரிகாதர்மம்" என்னும் சமஷ்டிவித்தை லக்ஷணத்துக்குப் பொருந்த, அதை ஆச்ரயிப்போர் குணம் விளங்க, இரண்டு மந்திரத்தை முதலில் எடுத்தெழுதி யிருக்கிறோம்.

இங்கிலீஷ் குறிப்புப்படி, பத்திரிகாசிரியர்,—

(1) ஸத்தியப்பிரகாசம் என்னும் தீவர்த்தியைக்கொண்டு உலகவாசனை படிந்துள்ளார் உள்ளத்திலுள்ள அந்தகாரத்தைப் போக்குபவரா யிருக்கவேண்டும்.

(2) அவர் உள்ளத்துணர்ந்த உண்மைக்கு விரோதமாக நடக்கக்கூடாது. விரோதமின்றி உலக வழியிலும் நடந்துகொள்ளலாம். நடந்துகொள்ளவேண்டு மென்று உலகுக்கு உதாரணமாயிருந்து அந்த வுண்மையைப் போதித்துவரல் வேண்டும்.

(3) "எடிடர்" என்னும் சப்தத்துக்குரிய மஹான், பத்திரிகாசிரியர்தொழிலில், "ஸத்யம் வத; தர்மம்சர" என்னும் வாக்கியங்களுக்கிலக்காய், உள்ளத்திற் கள்ளமின்றி யொழுகவேண்டும். இந்த ஒழுக்கமில்லார் 'எடிடர்' என்னும் திவ்யநாமத்துக்குரியராகார். அஃது " ஆச்சாரியாபிஷேகத்துக்கு " சமானமான ஒரு உன்னத பதவி. பிழைக்க வழியற்றவர்களுக்கெல்லாம் புகலிடமாக அதை யெண்ணுவது கலியின் கூத்தென்று சொல்ல வேண்டுமேயொழிய ஆச்சாரிய தர்மத்தில் சேர்ந்ததல்ல.

'தேஹ வியபாரத்திலு மனதை வித்துப் பிழைப்பதாம் வித்யா வியபசாரம் கொடியது' என்று இங்கிலீஷ்குறிப்பில் ஆங்கிலேயர்தாமே சொல்லியிருக்கிறர்.

நம்மவர்களுக்கு ஆங்கிலேயரிடத்தில் விளங்கும் ஸநாதனமான உயர்பாவங்களும் உத்தம குணங்களும் நன்னடத்தைகளும் எளிதில் படிவதில்லே. அவர்களிடத்துள்ள குற்றங்

கோணல்களையே யெளிதிலறிந்து கைப்பற்றுகிறார்கள். அல்லது அதற்காக அவர்களைத் தூஷிக்கிறார்கள். தூஷணையும் பூஷணையும் அந்தர்லக்ஷியம் ஸரியாக ஏற்பட்டவர்களுக்கு ஈஷணையொக்கு மாதலால், அவர்கள் அதை லக்ஷியம் செய்யார். மற்றவர்கள் உலகவாசனை படிந்துள்ளகாரணத்தால் தூஷிக்கவும் பூஷிக்கவும் அநதிகாரிகளாயிருக்கிறார்கள்.

(4) பத்திரிகைகளுக்கு சன்மார்க்கமொன்றே நன்மார்க்கம் என்கிறார். அஃதொன்றே பத்திரிகைக்கு உள்ளமும் உணர்வுமாயிருக்கிறதென்கிறார். பரோபகாரமே யுருவெடுத்தாற்போலு மிருக்கவேண்டிய பத்திரிகாலக்ஷணம், பணத்துக்கு விற்றுவாங்கக்கூடியதாயிருந்தால், அதற்கும் வியபிசார தோஷம் நேரிடுகிறது. வியபிசாரத்துவம் சண்டாளத்துவத்திலும் கொடியது.

(5) கடைசியாக, 'பத்திரிகாதர்மம்' தலையெடுத்து விளங்க, பத்திராசிரியர் உண்மையிற் றேர்ந்த தியானயோகியாக விருக்க வேண்டு மென்கிறார். அவர்,

(i) சரியாக (ஸ்வதர்மத்துக்குக்கேடுவராமல்) நினைக்க (சிந்திக்க)க் கற்றிருக்க வேண்டும். அஃதாவது பாவனாவிதியறிந்து பாவிக்க வேண்டும். மனோதர்ம மறிந்து சித்தவிருத்தி நிரோதனம்செய்து நினைக்கத்தக்கவரா யிருக்க வேண்டும்.

(ii) காலதத்துவ முணர்ந்து (காலதாமஸமின்றி) சிந்திக்க வல்லவரா யிருக்கவேண்டும்.

(iii) தீராச்சிந்தனை யுள்ளவரா யிருக்க வேண்டும். தியானயோகத்திற் பழகியவர்க்கன்றி இது சாத்தியமில்லை.

(iv) ஆழ அமர்ந்து சிந்திக்கவேண்டும். சித்தவிருத்தி நிரோதனத்தா லன்றி இது வேறு விதமாக சாத்தியமில்லை.

(v) சந்தர்ப்பங்களை நழுவவிடாது பிடிக்க வல்லவரா யிருக்கவேண்டும். இந்தவல்லமை பூரணமாயிருந்தால் அவரையே திரிகாலஞானியென்று சொல்லுகிறது. இந்தவிதமாகப் பஞ்சலக்ஷணத் தோடு பொருந்திய தியானசக்தியிருந்தால், அதுவே, 'பத்திரிகாதர்மம்' தலையெடுக்கச் செய்வதற் குகந்த உண்மையான இரகஸிய ஸாதனமா மென்கிறார்.

இப்படியாகப் பத்திரிகை நடத்தவும் பத்திரிகாசிரியரா யிருக்கும் "ஆச்சாரியபீடம்" வகிக்கவும் உரியவர், ஆங்கிலேயரின் உத்தமக் கொள்கைப்படியே பார்க்கில், உண்மையிற் றேறிய யோக தற்பரனா யிருக்க வேண்டும் என்று உள்ளங்கை நெல்லிக் கனிபோல் நன்றாக விளங்குகிறது. இந்தயோக்யதைபெற நாம் பதினெண்வருஷமா யுழைத்துப் பத்துவருஷமாய்ப் பலதீக்ஷைகள் பெற்றுக் கடைசியில் பரமன் கருணையால் நிர்வாணதீக்ஷையும் அளிக்கப் பெற்றோம். இப்படி தீக்ஷைகளி லெல்லாம் பெறற்கரியதாம் நிர்வாண தீக்ஷையளித்த பரமனைப்போற்ற, திருமந்திரத்தில் சொல்லிய மந்திரங்கள் இரண்டொன்றை யெடுத்துக்கூறி நமது உட்கருத்தை விளக்குவதோடு இதனை முடிப்போம்.

"மாயனை நாடி மனநெடுந் தேரேறிப்
போயின நாடறி யாதே புலம்புவர்
தேயமு நாடுந் திரிந்தெங்கள் செல்வனைக்
காயமின் னாட்டிடைக் கண்டு கொண்டேனே."

இதற்குச் சாதன மென்ன வெனிலோ, கேண்மின்:—

"மனம் விரிந்து குவிந்தது மாதவம்
மனம் விரிந்து குவிந்தது வாய்வு
மனவிரிந்து குவிந்தது மன்னுயிர்
மனம் விரிந்துரை மாண்டது முத்தியே."

"உண்ணின் றொளிரும் உவப்பிலி சாதனைக்
கண்ணின் றளிதரும் கருணையங் கடலை
எண்ணின் றெளியரைக் காக்குமென் னீசனைப்
பண்ணின்று பாடப் பணியது வாமே."

இப்படிச் செய்யும் பாவயோக முதிர்ச்சியில் பாவசமாதி சித்திக்கும்போது கருணையங் கடலைக் கண்ணாரக் காணலாம். உள்ளம் புகுந்தானை, உவப்பிலி நாதனைப் போற்றும் வழி யெதுவெனில், இது:—

" புகுந்து நின்றானெங்கள் புண்ணிய மூர்த்தி
புகுந்து நின்றானெங்கள் போதறி வாளன்
புகுந்து நின்றானடியார் தங்கள் நெஞ்சம்
புகுந்து நின்றானையே போற்று கின்றேனே."

" பூதக்கண் ணாடியிற் புகுந்திலன் போதளன்
வேதக்கண் ணாடியில் வேறே வெளிப்படும்
நீதிக்கண் ணாடி நினைவார் மனத்துளன்
தேதக்கண் ணாடியிற் கேட்டுநின் றேனே."

—திருமந்திரம்.

ஓம் தத்சத்.

---

# "They Only Live Who Dare."

' Stand upright, speak thy thought, declare
The Truth thou hast that all may share;
Be bold, proclaim it everywhere.
They only live who dare."

*H. E. Sir George Clarke's exhortation to the Students' Brotherhood, Bombay.*

## அஞ்சா நெஞ்சுடையவரே வாழ்பவர்.

பம்பாயிலுள்ள மாணவர் சகோதர சங்கத்துக்குத் தலைவரான ஸர் நாராயணராவ் சந்தரவர்க்கர் அவர்களுக்கு "நைட்" பட்டம் அளிக்கப் பெற்றதைப்பற்றி அவர் அக்கிராசனாதிபதியாக விருக்கும் அச்சங்கத்து மாணவர், அவருக்கும் அவருடைய பத்நியாருக்கும் சந்தோஷமுகமன் பத்திரிகை யொன்று வாசித்தார்கள். அப்பொழுது பம்பாய் கவர்னரான கனம்பொருந்திய ஸர் ஜியார்ஜ் க்ளார்க் அவர்கள் அக்கிராசனாதிபதியாக வீற்றிருந்து பேசியதில் அம்மாணவர்களுக்குப் புத்திமதி கூறிச் சில நல்வசனம் கூறினர். அவற்றில் மேற்குறிப்பிட்ட இங்கிலீஷ் கவியிலடங்கிய பொருள் மிகவும் மேலானதும் அருமையாகவுமுள்ளதுபற்றி அதை அப்படியே யெடுத்து வரையலானேம். அதன் கருத்து யோகசாஸ்திரத்தின் மூலக் கொள்கையா யிருப்பதால், அது நாம் அறிந்ததே யாயினும், ஆங்கிலேயருடைய உந்நத பாவமும் நம்முடைய உந்நத பாவமும் ஒன்றே யென்பதை விளக்குவதற்கு இது மிகவும் ஏற்றதா யுள்ளதுபற்றி இங்கு விசேஷமா யெடுத்துக் கூறலானேம்.

அதன் கருத்து என்னவெனில்:—

" நிற்க நிமிர்ந்து நேர்வழிதன்னில்
உன்னிய தொன்றை யுண்மையாப் பேசுக !
தர்க்கம தன்றியே தானுண ருண்மையைப்
பலரு மறியவே பறையறைந் தோதுக !
திடனுறு நெஞ்சத் தடல்மிகு தீரனாய்
உண்மையை யொளிக்கா தோதுக வெங்கும் !
அஞ்சா நெஞ்சுடை யவரே யுலகில்
நஞ்சா வருதுயர் வென்றுவாழ் பவராம்."

இது கூடியவரையில் இங்கிலீஷ் மூலத்தின் கருத்தையொட்டி அதிலடங்கிய உண்மையை உள்ளபடி வெளியிடுவதா யிருக்கிறது. இதுடன் ஸ்வாமி விவேகாநந்தர் செய்தருளிய சந்நியாசி கீதத்தின் மூன்றும் பாடலின் பொருளை யுற்று நோக்கி யுணர்க:—

" எதற்கும் அஞ்சா இயல்புடைத் துறவீ
இமைக்கண் மேன்மேல் அடுக்கும் பொருட்டுச்
சிமிட்டிச் சிமிட்டிச் சிற்றொளி காட்டி
இட்டுச் செல்லும் துட்டத் தீப்பேய்
அந்தகாரம் அடியொடு தொலைத்தி.—
ஆ! ஆ! அதுவே ஜீவாத் மாவைப்
'புநரபி ஜநநம் புநரபி மரணம்'
என்னும் இவற்றிற் சீர்த்துச் செல்லும்.
தான்அடங் கொருவன் தான்அடக் குவன்எலாம்.
ஈதறிந் தென்றும் இடம்கொடா திருத்தி " *

## Easy Lessons in Economics.

## குடிவாழ்க்கை.

### பாடம்—1. செல்வம்.

*(Specially written for the Vivekachinthamani.)*

செல்வம் என்பது என்ன வென்ற கேள்விக்கு விடை பகருவது எளிதான தென்று யாவரும் எண்ணக்கூடும். செல்வம், தனம் என்றபதங்களுக்குப் பணமொன்றையே அநேகர் பொருளாகக் கொள்ளுகிறார்கள். ஆனால் ஜனங்களுடைய திரவியத்தை அளவிடும்போது இத்தனை இலக்ஷம், இத்தனை ஆயிரம் ரூபாய், அல்லது இத்தனை ரூபாய் பெறும்படியான பூமிமுதலியவை யென்றே அளவிடுவது சகஜம். செல்வம் என்னும்பொழுது ரூபாய் முதலிய நாணயக்குவியல்களே நம்முன் வந்து நிற்கும். மேலும் பணமொன்றுண்டானால் மற்ற எல்லாப் பொருள்களையும் நாம் கைக்கொள்ளலாம்.

உணவு, ஆடை, ஆபரணம் வீடுமுதலியனவாகிய நம்முடைய ஜீவனத்திற்கும் சௌக்கியத்திற்கும் அவசியமான சகல பொருள்களும் பணமொன்றிருந்தால் நம்முடைய கையிலிருப்பனவாகும். பணத்தினால் எவ்விஷயத்தையும் நிர்வகிக்கும் சாமர்த்தியத்தை நாம் பெறுவதைக்கொண்டு அதை நாம் சம்பாதிக்கப் பலவழிகளில் பாடுபடுகிறோம். பணத்தை யொரு ஆதாரக்கருவி யென்று நினையாமல் அதையே அனுபவயோக்கியமான ஓர் பொருளென்று எண்ணுவது வழக்கம்.

ஆனால் செல்வத்தின் ரூபமானது மனிதருடைய பலவகையான சுக சௌக்கியங்களுக்கு போக்கியமான வைகளும், ஒருவரிடத்தி லிருந்துமற்றொருவர் கைமாற்றுதலுக்குத் தகுந்ததாயுமுள்ள எல்லாப் பொருள்களு மாகும். தானிய தவசவகைகள் நமக்குணவாகவுதவி, தகுந்த விலையாவது ஈடாவது நாம் கைமாற்ற விரும்பும் பொழுது கொடுக்கக் கூடியதாயிருந்தால் செல்வத்தில் சேருகிறது. மேற்படி தானியவகைகளைப் பயிர்செய்ய அவசியமான கருவிகளும் கால்நடைகளும், வீடுமுதலிய கட்டடங்களும், யந்திரங்களும், தொழிற்சாலைகளும், கப்பல், தோணிமுதலிய வியாபார ஸ்தாபனங்களும் செல்வமேயாகும். உணவுக்குரிய பொருள்களும், நம்முடைய சுகத்திற்கு அவசியமான வீட்டிலுள்ள சகல பொருள்களும் செல்வத்தின் ரூபபேதங்களே. பூமியிலிருந்து வெட்டி யெடுக்கப்படும், பொன், இரும்பு, நிலக்கரி முதலிய உலோகங்களும் நமக்கு நன்மை பயப்பனவாயிருப்பது பற்றியும் கைமாற்றும் பொருளாயிருப்பது பற்றியும் செல்வத்தில் சேர்க்கத் தக்கனவே என்பதில் சந்தேகமில்லை. ஒரு அணு நிக்கல் நாணயம் வெளிப்பட்ட சமயத்தில், அதிலுள்ள சக்கரவர்த்தியின் தலை, எழுத்துமுதலியவைகள் தேய்வினால் மறைந்து போனால் அவ்வுலோகமாகிய நாணயம் ஒரு பைசாவுக்குக்கூட விற்க ஏலாதே என்று கூறினார்கள். இங்கிலாந்தில் சில வருஷங்களுக்கு முன் பழைய தபால் ஸ்டாம்புகளை ஏலம்போடுகிறவர்களான ஒரு கூட்டுவர்த்தக சங்கத்தார், மோரிஸ் தீவில் 1854-ம் வருஷத்தில் உபயோகப்படுத்தின ஒரு செண்டு (சதம்) ஸ்டாம்பை

* இது ஸ்ரீமத் ம-கோபால கிருஷ்ணையர் பிரசுரித்துள்ள சிறு புத்தகத்திலிருந் தெடுக்கப் பெற்றது.

ஏலத்தில் விட்டபொழுது "நாலாயிரம்பவுனுக்கு" ஒருவர்வாங்கினதுடன், தனக்கு அது சகாயமாகவேகிடைத்ததென்று கருதினாராம். ஆகையால் ஒவ்வொரு பொருளுக்கும் மதிப்பே விலையாகிறதன்றி அப்பொருளிலடங்கியிருக்கும் விலை மதிக்கத்தக்க உலோகமாவது மற்றப் பொருளாவதன்று. இப்படியில்லாவிட்டால், வயிரக்கல், கெம்பு முதலிய நவமணிகளுக்கு விலை யேறுவதில் நியாயமில்லை. பணமொன்றைக்கொண்டு இவையனைத்தையும்நாம் அடையலாமாயினும் பணமே சுகப் பொருளன்று. சுகத்தைத் தரத்தக்க மற்ற எல்லாப் பொருள்களையும் அதன் மூலமாய்ப் பெறுவது எளிதென்பதை யுணர்ந்தே, அதைத்தேடி திரைகடலோடியு மடைந்து நாளாவட்டத்தில் அதையே சுகசௌக்கியத்திற் குரியது போல் எண்ணி அதன் மாய்கைக்கு மனிதர்கள் உட்படுவது சகஜம். பணமொன்றே செல்வமென்று கருதுவது பிழையே யாயினும், பணமும் செல்வத்தில் சேர்ந்த பல வற்றி லொன்றென்பதில் சந்தேகமில்லை என்று கூறத்தகும். இப்படியே மனிதர்களுக்கு அனுபவயோக்கியமும் அவசியமுமான எல்லாப்பொருள்களும் செல்வமாகமாட்டா. எப்படி யென்றால்:—காற்றும் தண்ணீரும் நமக்கு அவசியமான பொருளாயினும், அவைகளைப்பணங்கொடுத்துவாங்குவது சாதாரணமாயில்லை. பெரிய நகரங்களில் தண்ணீருக்கு வரி என்கிற விலையும், சமுத்திரங்களில் முத்து முதலியவைகளுக்காக முழுகுகிறவர்கள் அச்சமயத்தில் எவ்வளவு விலை கொடுத்தாயினும், காற்றைவாங்க சம்மதிப்பார்களாயினும், இவைகளுக்காக பிரபஞ்சமொத்தத்தில் பார்க்கும் பொழுது விலையில்லையாதலின் செல்வத்தில் சேராதென்றே கருதலாம்.

ஏ. என்றவன் பி. என்றவனுக்கு ஆயிரம் ரூபாய் கடன் கொடுக்க, பி. என்றவன் அதை கைமுதலாகக் கொண்டு வியாபாரஞ் செய்தால் மொத்தத்தினுள்ளது ஆயிரம் ரூபாய் தானேயன்றி, ஏ, பி. என்கிற இருவருக்கும் அத்தொகை வருமானத்திற்குக் காரணமாயினும், முதல் இரண்டாயிர மாகாதன்றோ! ஒரு தோட்டத்தில் வெட்டப்பட்ட கிணற்றில் ஜல ஊற்று ஏற்படாததைக்கொண்டு அதன் சொந்தக்காரன் அடுத்த தோட்டத்தி லுள்ள கிணற்றுத் தண்ணீருக்கு விலை கொடுத்து வாங்குகிறான். தண்ணீருள்ள கிணற்றின்சொந்தக் காரனுக்கு அக்கிணற்று நீர் செல்வமானாலும் அதனால் தேசத்திற்கு செல்வப் பெருக்கமுண்டாகிறதில்லை. ஒரு தேசத்திலுள்ள இருவர்களில், ஒருவர்பணம் மற்றொருவருக்கு மாறுவதால் தேசமொத்தத்திற்கு செல்வத்தில் மாறுதலொன்றுமில்லை. நம்மிடத்திலுள்ள இருபெட்டிகளில், ஒன்றினின்று மற்றொன்றில் பணத்தை மாற்றிவைப்பதினால், நம்முடைய தொகை எப்படி அதிகப்படுவதில்லையோ அப்படியே ஒருவனுடைய பூமி, வீடு முதலியவைகளுக்கு அதிக விலை கொடுத்து வாங்குவதினால் ஒருவனுக்கு நஷ்டமும் மற்றவனுக்கு இலாபமுமேயாயினும், தேசமொத்தத்திற்கு இலாபநஷ்டமொன்று மில்லையென்றே கூறலாம்.

ஒரு தேசத்தின் கண்ணுள்ள செல்வம் பலவகைப்பட்டது. மனிதனுக்கு சுகத்தையும் சௌக்கியத்தையும் தரத்தக்க பொருள்களும் மனோவிருப்பத்தைப்பூர்த்திசெய்யத்தக்க பொருள்களும், வேண்டுமளவு இலவசமாய்க்கிடைக்காமல் விலை கொடுத்து வாங்கும் நிலைமையிலுள்ளயாவும் செல்வமாகவே கருதப்படுகிறபடியால், ஒவ்வொருதொழிலுக்கு வேண்டிய கருவிகளும் செல்வமேயாகும். இவ்விதமான செல்வம் யாவருக்கும் ஒரேயளவாக அமைகிறதில்லை. சிலருக்கு மிகுதியாகவும் பலருக்கு ஜீவனத்திற்குப் போதுமான அளவாகவும், அநேகருக்கு அதற்குங்குறைந்து மிருக்கின்றது. விசாரிக்குங்கால் செல்வவிஷயத்தில் ஏற்பட்டிருக்கிற ஏற்றத்தாழ்வுகள் கடவுளின்

காரியமல்லவென்றும், முன்ஜன்மத்தின் தீவினைப் பயனல்லவென்றும், சிலருடைய பேராசையினாலும் மோசக்கருத்தினாலுமுண்டான தீங்குமல்லவென்றும், தனவான்களாயிருப்பதும், தனமின்றிவருந்துவதும் நாமே செய்துக்கொள்ளும் காரியமென்றும் மேனாட்டுநாகரீகத்திற் பயின்ற பலமேதாவிகளும் கருதுகிறார்கள். அப்படிக் கருதாவிடில், சிரமப்பட்டு தனத்தைத்தேடயாவரும் முன்வராரென்பதில் தடையில்லை. ஆகையாலன்றோ ஒருவன் சம்பாதித்த தனத்தை அவனேவைத்து ஆண்டு அனுபவிக்க வேண்டுமேயல்லாது அவனை மீறி பிறர் அதைப்பிடுங்கிக்கொள்ளுதல் நியாயமன்றென்றும், அவ்விதமாக அநியாயஞ்செய்வோர் தண்டனைக்குள்ளாவாரென்றும் எத்தேசத்திலும் ஏற்பட்டிருக்கிறது.

ஒருவன் தேடிய பொருளைத் தன் இஷ்டப்படி செலவிடத் தேடியவனுக்கு அதிகாரமிருக்கவேண்டியது அவசியமாகையால், அவன் அதை அனுபவித்தாலும், புதல்வர், இஷ்டமித்திரர்களுக்குத் தானுள்ளபோதும், தனக்குப் பிற்காலத்திலும் கொடுத்துதவினாலும், தர்மத்தில் செலவிட்டாலும், வீணாக்கினாலும், அதைத் தடுத்து உரிமையைக் குறைப்பது நியாயமாகமாட்டாதென்றுஎண்ணப்படுகிறது.

மனிதர்களெல்லாம் மற்ற பல விஷயங்களில் ஒத்திருக்கும்பொழுது, சிலர் சிரமப்பட்டுத்திரவியத்தைத் தேடாமல், பிதா தனக்கு வைத்ததென்றும், தாயாதிகளிடத்தினின்றுகிடைத்ததென்றும் வைத்துக்கொண்டு சுகமாயிருக்கையில் பலர்வருந்துவது நியாயமாகுமா? தங்களுடைய பிதாமுதலியோர் திரவியத்தைச்சேகரித்துவைக்காமற் போன குற்றத்திற்காக அவர்கள் வருந்துவதில் பிரயோஜனமுண்டா? தான் தேடிய திரவியமானது தனக்குப்பிறகு பிரியமான புதல்வர் முதலியோருக்குச் சேராதென்றால், ஒவ்வொருவனும் தான்தேடியதைத் தன் ஆயுள் நாளிலேயே வீணாக்கிவிடக் கருதுவானன்றோ? தவிர தனக்கு வேண்டியமட்டும் சம்பாதித்த பின் அதிகமாய்த்தேடுவது கண்டவர் கைக்குப் போவதாயிருந்தால் ஒருவனும் அதிகமாய்ச் சம்பாதிக்க ஆவல்கொள்ளான். ஆகையால் அவனவன் தேடிச்சம்பாதித்த பொருளை அவனவன் ஆண்டு அனுபவிக்கவும், இறந்த பின்னும் அவனிஷ்டப்படி அதைச் செலவழிக்கவும் உரிமையைப்பெற்றிருக்கின்றான். இல்லாவிட்டால் மனிதர்களுக்கு செல்வவிருத்தியிலுள்ள அவா மழுங்கிப்போம். ஒருவரும் செல்வ விருத்திக்கான மார்க்கத்திலிறங்கமாட்டார்கள்.

T. C. வேங்கடராமண ஐயர்.

---

## THE RECOGNITION OF THE ETERNALLY FEMININE, OR, THE CENTRAL WILL.

## The Marriage of Uma at Tiru-mayilai.

### A CLUE TO THE REALISATION OF THE MEANING OF "*BINDU*."

(A Sequel to the Study of Temple Traditions).

* "*Ichcha Sakti Umakumari*".—*Siva Sutra.*—

"Nature & Wisdom always say the same thing."—*Juvenal.*

* "Whatever we call it, we mean that it is the Feminine Principle, and instinctively look upon it as self-procreative. The Real we do not know in any other form than that of the feminine or central will.... As in physics energy is the only thing known, so in reality the Feminine is the only life known or definable. Hence the Feminine or central will is by necessity the central principle of all philosophy, & is the Monism we all search for.—", 'The Eternally Feminine.'

" For that which is below is like that which is above, and that which is above is like that which is below, for the performance of the miracles of the one substance, " runs the Mystic Hermetic precept.

" And if mankind had studied more the open book of Nature—the only revelation that has been incontestably revealed to us as the manifested Law governing the Universe—We should not have wandered so far from the Eternal Motherhood, the Elohim of Might, Wisdom and Holiness. For we should have recognised the immutability of Natural Law, how ' Ever at the loom of Birth The mighty Mother weaves and sings; she wears fresh robes for mangled earth, she sings—fresh hopes for desperate things".—*Charles Kingsley*, Quoted by Miss. Swiney in her book 'The Cosmic procession.'

திருமயிலையில்

## உமாமஹேசுவரர் திருக்கல்யாண மகோற்சவக் காட்சி.

" இச்சாசக்தி உமாகுமாரி."—சிவசூத்திரம்.

# " பிந்து " வென்றால் என்ன ?.

" பிந்து தர்ப்பணசந்துஷ்டாயைநமஃ "

## (மாயாண்டிச்சித்தன் ஞானப்பாட்டு).

கோயிற்றிருப்பதிகம்.

" காமேசுவரமுகாலோககல்பித ஸ்ரீகணேசுவராயைநமஃ "

—oo※oo—

### 1. வியஷ்டிபாவமுணர்த்தல்.

(1) கண்ணோடு கண்கலந்து காண்பான்காண் பொருளற்றால்
எண்ணோ டெண்கலந்து ஏகமாய் விளங்குமொன்று!
விண்ணோடு விண்கலந்து விண்ணுமண்ணு மொன்றானால்
கண்ணோடு கண்கலந்த காட்சியது பிந்துவாமே!

### 2. சமஷ்டிபாவமுணர்த்தல்.

(2) பிந்துவென்றா லென்னவென்று பின்னுமுன்னிக் கேட்பையானால்
சிந்துவிலே நதியெல்லாம் சேர்ந்தொன்றாய்க் கலந்ததுபோல்
† தந்துவிலே பருத்தியெல்லாம் தொடர்ந்தொன்றாய்த் தானதுவேயானதுபோல்
‡ விந்துவிலே தத்துவமெல்லாம் தொடர்ந்தொன்றாய்த் தானதுவேயாகுமப்பா!

† தந்து—நூல். ‡ 'பரமாயசத்தியுட்' தோன்றிய 'பிறப்பு' முதல் 'மண்ணொடு நீரங்கி மதியொடுகாற் றிரவி, விண்ணெச்சமூர்த்தியோடெட்டு' என்ற ஈறாகவுள்ள "இவையெல்லாங் கூடியுடம்பாயவொன்றின், அவை யெல்லாமானது விந்து" என ஔவையார் வீட்டுநெறிப்பாலின் முதலாவதத்தியாயமாம் 'பிறப் பினிலைமை'யி லுணர்த்தி யிருக்கிறார். (ஔவைகுறள் பார்க்க).

3. வியஷ்டிபேதமெல்லாம் சமஷ்டியி லொடுங்குவ துணர்த்தல்.

(3) ஆகுமப்பா விந்துவதாய் ஸப்தலோகந் தானொடுங்கி ¶
வேகுமப்பா உடம்பெல்லாம் விவிதமாய்ப் பிரியுந்தத்துவம்
ஆகுமப்பா விரிந்ததத்துவம் அத்தனையும் பொன்மயமாய்ச்
சாகுமப்பா பேதமெல்லாம் $ சத்தொடொன்றாய்த் தான் கூடி !

4. சமஷ்டி ப்ரணவ ஸ்வரூபத்தைக் காட்டவேண்டி வியஷ்டியில் சமஷ்டியாம் நாதபிந்து தத்துவத்தை யோகஸம்யமத்தால் உணர்கவென் றுணர்த்தல்.

(4) ஒன்றாய்த்தான் கூடியது ஓங்கார ரூபமாகும்
நன்றாய்த்தான் பாரதைநீ நான்மறையின் சாரமது
கொன்றாற்றான் தெரியவரும் குரங்குமனச் சேஷ்டையதை
நன்றாய்த்தான் பார்த்துணர்நீ நாதபிந்து தத்துவத்தை.

5. தாரணத்தியானஸமாதியாம் யோகஸம்யமத்தில் 'நாடிதாரணை' யுணர்த்தல்.

(5) நாதபிந்து தத்துவத்தை நன்றாய்நீ யறியவேண்டில்
வாதபித்த சிலேஷ்மங்களின் சேஷ்டையது ஒடுங்கவேண்டும்
வாதபித்த சிலேஷ்மஷேஷ்டை ப்ரூமத்யத்தில் †† தானொடுங்கும்
வாதபித்த சிலேஷ்மசேஷ்டை ‡‡ யொடுங்கில் 'நாடி தாரணை'யாம்.

6. நாடிஸம்யமத்திலிருந்து வாயு ஸம்யமத்தால் குண்டலினியோக மென்னும் "அங்கிதாரணை" யுணர்த்தல்.

(6) நாடிதாரணை "யுந்திமுதலா, ஓங்காரத் துட்பொருளாய்"
ஆடினவேக மனைத்துமொன்றாய் "நின்றதுநாடி நிலை" யென்பர். †
ஓடினநாடியின் தாரணைதரித்து ஓடும்வாயுவைப் பிடித்தையானால்
கூடினவாயுவில் மனமொடுங்கிக் குண்டலிப் பாம்பாய்த் தானாடும்.

7. குண்டலினியோகத்திலிருந்து சங்கல்பவிகல்ப நீக்கிப்பார்க்கும் வகையுணர்த்தல்.

(7) குண்டலிப்பாம்பாம் மனமடைத்த குடத்தைமெல்ல வுடைத்திடுநீ
குண்டலிப்பாம்பின் குடமுடைய வுடைந்த சப்தம் ஜோதியாகும் ‡

---

¶ "ட - ற - ல - க்ஷ - ஸ - ஹ்யூம்" என்னு மந்த்ரத்தின் விரிவன்றி யிது வேறொன்றுமல்ல.

$ சப்தாதிவர்ண பேதமெல்லாம். †† புருவமையம் அல்லது நந்திஸ்தானம் என்று சொல்லும் ஷடாதாரரூபமாம் மண்டலத்தோற்ற ஒழிவில்.

‡‡ 'சேஷ்டை' யென்றால் விஷமம், வாதபித்த சிலேஷ்மங்கள் சமரஸப்பட்ட விடத்து, 'சேஷ்டையொடுங்கி' பாலில் நெய் கலந்தாற்போல் வியாபித்திருக்கும். அவற்றின்நடை சித்தவிருத்தி நிரோதனமான அறிவிற்கு லக்ஷியமாம். அந்தலக்ஷியத்தில்தரித்திருந்து அஃதோடொன்றுபட்டுணர்தல் நாடிதாரணையாம். பல உபநதிகளும்சிற்றாறுகளும், சில்லரை ஊற்றுக்களும் சேர்ந்து பெரியதோர் நதிப்பிரவாக மாவதுபோல், எழுபத்தீராயிரம் நாடிகளும் உந்திக்கமலத்தில் ஒன்றாய்ச் சேர்த்து, சமுத்திரத்தோடு சேரும் நதிபோல், 'உந்திமுதலாய் ஓங்காரத்துட்பொருளாய்' நிற்கும். இஃதோ டொன்றுபட்டிருந் துணர்தலே நாடிஸம்யமமாகும்.

† ஔவைகுறள் பார்க்க. ‡ வாயு சமஷ்டியில்.

‡ "அநாஹதஸ்யசப்தஸ்ய தஸ்யசப்தஸ்யயோத்விநி: த்வநேரந்தர்க்கதம் ஜ்யோதி: ஜ்யோதிரந்தர்க்கதம்மன: யன்மனஸ்த்ரிஜகத் ஸ்ருஷ்டிஸ்திதி வ்யஸநகர்மக்ருத்" என்பது சுருதிவாக்கியம்.

குண்டலிப்பாம்பந்த ஜோதிக்குடத்தில் குதித்துக்குதித்து ஆடுதுபார் !
குண்டலிப்பாம்பது குதித்தாட குணத்திரியங்களும் ஆடுதுபார் !

8. குண்டலிநிதரிசனம் செய்து கொண்டு அதிலிருந்தபடி மோநகாநத்தில் லக்ஷியத்தைக் கூட்டும் வகையுணர்த்தல். (திருமயிலைக் கோயிலில் இது "நடராஜாதரிசனம்" எனும் உற்சவமாய் நடத்தப்படுகிறது.)

(8) ஆடுதுபாராதோ குண்டலிப்பாம்பதை யடக்குவாருண்டோ சொல்லுநீ !
பாடுதுபாருள்ளே ப்ரேமகானம் !
படத்தைத்தூக்கி நின்றாடுதுபார் !
ஆடுதுபாரந்தக் குண்டலிப்பாம்பு அசைவற்றுநின் றாடுதுபார் !

9 சமஷ்டிபிந்துவைக் காட்டி வேதமஹாவாக்கியங்கள் அதில் ஒடுங்கி நிற்பதையுணர்த்தல்.—(இதுவே கோயிலில் ஸ்வாமி திருமணக்கோலத்தோடு கைலாஸபதியாகக்கொடுக்கும் கைலாசவாஹனக்காட்சி.)

(9) அசைவற்றுநின் றாடுமனமே பிந்துரூப மென்றுசொல்லு !
அசைவற்றுநின் றாடுமனத்தை அறிவாலன்றி யறிவதுண்டோ !
அசைவற்றாடு பம்பரம்போல் இசையுற்றாடிற்சோதிமனம்
பசையற்றதுமுன் விஷயமற்று வேதாந்தமோனமாய்த்தான் விளங்கும்.

10. சமஷ்டிபிந்துவின் த்ரிபுடிரஹிதமே துரியபிந்துவென்றும் சமஷ்டிபிந்துவின்சலனரூபமே மாயை மயக்கத்துக்குக் காரணமென்று முணர்த்தல்.—(இதுவே கோயிலில் அதிசிரேஷ்டமான 'பள்ளியறைத்தீபாராதனை' யுற்சவமாம்.)

(10) வேதாந்த மோனமாய் விளங்குயர் மனத்தை ¶
நாதாந்தரூபமா யஹம்விண்டு கண்டால் §
நாதவடி வானமஹா மந்திராதி சக்தியின்
வேதவடிவதே பிந்துரூபம்! வாதநோவாலது போதையாமே !



¶ இஃதையே 'உன்மனிபாவம்' என்றும், 'ஆத்மபாவம்' என்றும் சுருதிகள் எடுத்துச்சொல்லும்.

§ "அஹத்திற் கண்கொண்டு காண்பதே யானந்தம்" என்றும் திருமந்திரோபதேசத்தை யுன்னிப் பின்னும், "அறிந்த அறிவழியவேண்டும், அப்புறந்சானையாசுகம்" என்ற ஆநந்தத்தாய்மொழியின் உண்மையை ஆய்ந்தோய்ந்துணர்ந்துய்க. 'துரியபிந்து' வென்றாலும் 'மஹாபிந்து' வென்றாலும் 'ப்ரஹ்மபிந்து 'அமிர்தபிந்து' என்றலதைப்போல் ஒன்றே. அஃது உன்மனியுங் கடந்ததானதால் அதை அறிவாலறிந்து சொல்லமுடியாது. "அறிவழிந்த சுகமதனையறிந்து சொல்வ தெப்படிச்சொல்!" "அறிவழிந்த சுகமதனை யனுபவித்தேயறியவேண்டும்"—என்ற ஆனந்தத்தாய்மொழிப்படி, உமையம்மையார் திருமணக்கோலத்தை மந்திர, தந்திர, யந்திரபாவங்கள் பொருந்தப் பொருத்தி யலங்கரித்திருந்த கண்கொள்ளாக் காட்சியை நாம் காணக்கொடுத்துவைத்ததுபோல் அஹக்கண்கொண்டு பார்த்தனுபவிக்கக்கொடுத்து! "வைத்தவர்களே பிந்துதர்ப்பணசந்துஷ்டாயைநமஃ" என்னும் ஹசிய நாமத்தின் உட்பொருளை யுணர்ந்து, 'அமிர்தபிந்து" அல்லது 'ப்ராஹ்மபிந்து' வின் உட்பொருளை யுணர்ந்துண்டுய்வார்.

KANNAKI - A SOCIAL DRAMA.

## கண்ணகி.

அங்கம் II.]　　　[காட்சி 3.

இடம்:—கண்ணகியின் அந்தப்புரம்.

காலம்:—நண்பகல்.

பாத்திரர்:— { கோவலன் / கண்ணகி / தேவந்தி

தேவ:—கண்ணகி! நீ எவ்வளவுகாலந்தான் தனித்து வாழவேண்டுமோ! அப்பாதகி மாதவி கையில் சிக்கிக்கொண்ட உனதுகணவர் அவள் மாயவலையினின்றும் தப்புவதற்கு இறைவன் அருள்புரியமாட்டானோ! பெண்ணாயகி நீ வருந்துவது அவ்விறைவனுக்குத் தெரிய வில்லையோ! சகி! உன்னுடைய நிலைமையை நினைக்கும்போது என்மனம் அனலிலிட்ட மெழுகுபோ லுருகுகின்றது! என்னசெய்யலாம்!

(பெருமூச்சு விடுகிறாள்.)

கண்ணகி:—என்னடி தேவந்தி! நீ கூட கொஞ்சமும் அறிவில்லாமல் பேதைத் தனமாக வார்த்தையாடுகிறாய்! எனது கணவர் தான் என்செய்வார்! இறைவர்தாம் என்செய்வார்! மாதவியைத் தூஷிப்பதாற்றான் பயனென்ன! எல்லாம் அவரவர் செய்தவினைக் கீடாக நடக்குமேயன்றி வேறில்லை!

தேவ:—இறைவன் பார்த்து அவ்வினையை மாற்றவேண்டுமானால் மாற்றக் கூடாதோ?

கண்ணகி:—சகியே! இறைவனா லாகாத காரியமு மிருக்கின்றதோ?

"கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான் றாளைவணங்காத் தலை" என்றாரன்றோ நமது தெய்வப்புலமைத் திருவள்ளுவனார்! தேவந்தி! அதிலுள்ள "எண்குணத்தான்" என்பதைப்பற்றிச் சற்று ஆழ்ந்து யோசனை செய்தால் இறைவனுடைய இலக்கணம் நன்கு புலப்படும். எண்குணமாவன:—தன் வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கை யறிவினனாதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, வரம்பி லின்பமுடைமை, முடிவி லாற்றலுடைமை என்பனவாம்! இவ்வொவ்வொன்றனையும் பற்றிக் கூறப்புகின் நமது சம்பாஷணை இப்போது முடிவுபெறாது! மேலும் அவைகளை யெடுத்துரைக்கக் கூடிய ஆற்றலும் என்னிடத்தில்லை! நீ இறைவனுடைய சக்தியைக்குறித்து வினவியபடியால் அதைமட்டும் விவரிக்கவேண்டி மேற்சொல்லிய எண்குணங்களுள் ஒன்றாகிய "முடிவிலாற்ற லுடைமை" என்பதை மட்டும் என் சிற்றறிவிற் கெட்டியமட்டும் ஒருவாறு சொல்லுகிறேன்!

தேவ:—சகி! சொல் கேட்கலாம்!

கண்ணகி:—சகி! தேவந்தி! நான் சொல்வதைக் கவனமாய்க்கேள்! "ஆற்றல்" என்றால் "சக்தி" என்று அர்த்தம். "முடிவில்" என்பதற்கு முடிவு இல்லாத, எல்லையற்ற, ஓர் வரையறைக் குட்படாத என்று பொருள். ஆகவே 'முடிவிலாற்றல்' என்பது எல்லையற்ற சக்தி எனப் பொருள்படுகிற தன்றோ! அறிவுள்ள பொருள்களெல்லாம் இறைவன் அறிவித்தாலன்றித் தாமே யறியமாட்டா! அறிவற்ற பொருள்க ளெல்லாம் அவன் அசைவித்தாலன்றித் தாமே அசையமாட்டா! கேவலம் ஒரு நாட்டைப் பரிபாலிப்பதற்கு அரசன் எவ்வளவு சக்தியுடையவனாக இருக்கவேண்டி யிருக்கிறது! அப்படியிருக்க எல்லாச் சீவர்களையும் அறிவித்தற்கும், எல்லாப் பிரபஞ்சங்களையும் அசைவித்தற்கும் எவ்வளவு ஆற்றல் வேண்டியிருக்கும்! உன்னாலாவது, என்னாலாவது, மற்றெவராலாவது சொல்ல முடியுமா? ஆற்றலின் அளவு தெரிந்தாலன்றோ பின்பு அவ்வாற்றலை யுடைய பொருளின்

இலக்கணம் தெரியும்! அப்படியிருக்க இறைவனுடைய இலக்கணத்தைப் பற்றி யாரால்தான் முற்றும் உரைக்கக்கூடும்? சகி! எல்லாப் பொருள்களும் ஆற்ற லுடையனவே! அறிவுள்ள பொருளாயினும் சரி அறிவற்றபொருளாயினுஞ் சரி. ஆனால் சில சமயம் இவ்வாற்றல் மறைந்தும், சிலசமயம் வெளிப்பட்டும் காணப்படும்; காந்தத்திற்கு இழுத்தற் றொழில் ஓர் ஆற்றல். காந்தக்கல் தனியே கிடக்கும்: அதனிடமுள்ள "இழுத்தல்" என்னும் ஆற்றல் மறைந்துகிடக்கிறது! இரும்பைக்கண்டவழி வெளிப்பட்டுத் தோன்றுகிறது! அதுபோலவே இறைவனுக் குள்ள இயற்கைப் பேராற்றல் மறைந்து கிடந்ததே யாயினும் எண்ணிறந்த சீவர்களைக் கண்டவழி வெளிப்பட்டுத் தோன்றுகிறது! எங்ஙனமெனில் இப்பிரபஞ்சத்தையும், ஆகாயத்தில் விளங்கும் எண்ணிறந்த வான்மீன்களையும், சூரியமண்டலம், சந்திரமண்டலம் முதலிய கோளங்களையும் பார்க்கும் போது இவ்வளவையும் உண்டாக்கின கர்த்தா ஒருவன் இருக்கவேண்டுமென உனக்குப் புலப்படவில்லையா! இவ்வளவு சிருஷ்டியையும் எதற்காகச் செய்தான்! விளையாட்டிற்காகவா? இல்லை; இல்லை! சீவர்களாகிய நாம் இன்ப மனுபவிப்பதற்காகவே! துன்பமனுபவிக்கவன்றோ வெனின்; அன்று. இறைவன் அன்பே சொரூபமானவன்! கருணையே உருவமானவன்! இன்பக் கடல்! ஆனந்த சமுத்திரம்! அப்படிப் பட்டவன் நமக்கு துன்பத்தைக் கொடுப்பான் என்று சொல்வது எவ்வளவு அறியாமை! மேலும் அவனே இயற்கை யறிவும், முற்றுணர்வுமுடையவன்! நமக்கு நன்மை இன்னது தீமை இன்னது என்பதை அறிந்தவன்! ஆதலால் நம்முடைய நன்மைக்காகவே எல்லாம் செய்கிறான்! இப்போது நாம் கஷ்டப்படுவதும் நன்மையைக் குறித்தே! ஆதலின் இறைவனைக் குறை கூறுதல் மூடத்தனம்! நான் எனது கணவனுடைய ஆதரணையிலிருந்து அவரோடு சரசசல்லாபம் செய்துகொண் டிருந்தால் கடவுளை நினைக்கப்போகிறேனோ? இல்லை! எத்தனையோ செல்வவந்தர்கள் கடவுள் என்னும் பெயரை மறந்திருக்கிறார்கள்! சுகமுண்டாகும் போது கடவுளைப் பற்றிநினைப்பவர்கொஞ்சம்; துக்கமுண்டாகும் போதுதான் இறைவனைப்பற்றி எண்ணவிடமுண்டாகிறது. ஆதலால் கோவல ரிவ்வித மென்னை வருத்தத்திற்குள்ளாக்கி வருவதும் எனது நன்மையைக் கருதியே! எனதாசைக்கணவர் எனக்கு நன்மையைத்தானே கருதுவர்!

தேவ:—இரு இரு! யாரோ கதவைத் தட்டுகிறார்களே! பார்த்துவருகிறேன்!

(போகிறாள்).

கோவ:—(தேவந்தி கதவைத்திறக்கவே) தோழி! உனதுதலைவி கண்ணகி எங்கே? என்னசெய்துக்கொண் டிருக்கிறாள்?

தேவ:—அந்தப்புரத்திற்ற் னிருக்கிறாள் சும்மாதா னிருக்கின்றாள்!

கோவ:—நான் வந்திருப்பதாகத் தெரிவி.

தேவ:—அப்படியே! (போகின்றாள்.) (மீண்டும் வந்து) வரும்படியாகக் கேட்டுக் கொண்டாள்!

கோவ:—மிகவும் வருத்தமாக விருக்கின்றாளோ?

தேவ:—வருத்தமாகத்தா னிருந்தாள்! ஆனால் இப்போது—இல்லை! தங்களுடைய வரவைத் தெரிவித்தவுடன் அவளுடைய வருத்தம் சூரியனைக் கண்ட பனிபோலப் பறந்து போய் விட்டது!

கோவ:—என்னையே எதிர்பார்த் திருந்தாளென்று சொல்!

தேவ:—ஆம்! சூரியனை யெதிபார்த் திருக்கும் தாமரைப் பஷ்பம் போலவும், கார் காலத்தை யெதிர்பார்த் திருக்கும் மயிலைப்

போலவும் உங்கள் வரவையே எதிர்பார்த்திருந்தாள்!

கோவ:—ஆனால் வா போகலாம்!

(இருவரும் உட்செல்லுகிறார்கள்).

கண்:—(கோவலன் வந்ததும்) நாதா! வரல்வேண்டும்! (சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து நிற்கின்றாள்).

கோவ:—என் காதற்கிழத்தியே! கைக்காத தீங்கனியே! கரையாத கற்கண்டே தெவிட்டாவமுதே! கணுவற்ற கரும்பே!கொய்யாத நறுமலரே! கோவாதமணியே! குலையாத வொளியே! குளியாப் பெருமுத்தே விலைமதியாப் பொன்னே! மெய்யான பெருவாழ்வே !விந்தை மாகதமே! மங்காதசுடரே! வானோர்புகழ் திருவே! உயிரோவியமே! எனதுயிருக் குயிரே! கண்ணகிச் செல்வமே! நான் செய்தபிழையை யெல்லாம் மன்னிக்கக் கோருகிறேன்! (பாதத்தில் விழ்கிறான்.)

கண்:—(அவனை வாரியெடுத்து) நாதா! தாங்களும் இவ்விதம் செய்யலாமா! கேவலம் தங்கள் ஊழியக் காரியான என்னையும் வணங்கல் முறையோ! தருமமா! நீதியா!

கோவ:—காதலி! கல்வியிற் கலைமாதெனவும், கற்பில் அருந்ததியெனவும், பொறுமையிற் பூமிதேவியெனவும், கருணையில் கௌரியெனவும், எழிலில் இந்திராணி யெனவும் சொல்லக்கூடிய உன்னை விடுத்துக் கேவலம் ஓர் தாசிவயப்பட்ட இக்கொடியவன் உன்னையேன் வணங்கலாகாது! அடி பிராண நாயகி, நான் எதை நினைத்து வருவேன்! நான் எதைப் பற்றி அழுவேன்! இப்பாதகனுகிய எனக்கும் விமோசன முண்டோ! (துக்கத்துடன்) உண்மைக்காகவே உருவெடுத்து வந்திருக்கும் உன்னை அலட்சியம் செய்தேனே, அதைக்குறித்தழுவனோ! எனது பெற்றோர்களுக்குக் கெட்டபெயரை உண்டாக்கினேனே அதைக் குறித் தழுவனோ! பரஸ்திரீகமனனென உலகம் கூறும் இழிசொல் நினைந் தழுவனோ! மாதவியின்பொய் ஒழுக்கத்தை யறியாமலிருந்த, என் மதியீனத்திற்காக அழுவனோ! பேதையாகிய உனக்கு ஏற்பட்டவருத்தத்தைக் குறித்தழுவனோ! ஐயோ! பிராண சகி! என்னுடைய துக்கத்திற்குக் கரையுண்டோ! அளவுண்டோ! அக்கடலைக் கடத்தற்கு நீயே தெப்பம்! நீயே கரை! நீயே அணை! உன்னுடைய மன்னிப்பைப் பெற்றாலன்றி என் மனம் சமாதானப்படாது! எனது துக்கம் தீராது! உன்மனமிரங்கி, உன் முத்தானவாய் திறந்து "மன்னித்தேன்" என்று ஒரு வார்த்தை சொல்லக்கூடாதா? நீயேசரணம்! நீயே சரணம்! (மூர்ச்சையாகிறான்).

கண்:—(விசிறிக்கொண்டு கோவலனுக்கு விசிறித், தண்ணீர் தெளித்துக் களை தீர்த்த பின்) நாதா! மன்னித்தேன்! மன்னித்தேன்! மன்னிக்கவேண்டும்!

கோவ:—கண்ணகி! மன்னித்தேன் என்று சொல்லிப் பின் மன்னிக்க வேண்டு மென்றாயே! அஃதென்ன!

கண்:—பிராண காந்தா! நானோ தங்களை "மன்னித்தேன்" என்று கூறுவது! அப்படி நான் கூறுவது பாதக மன்றோ! தங்களுடைய வார்த்தையைக் கடக்கக் கூடாதெனச் சொன்னேன்! அப்படிச் சொன்னதை மன்னிக்க வேண்டும்! (புன்னகையுடன்) இப்போது சமாதான மாகிவிட்டதா!

கோவ:—சமாதானமாயிற்று.

கண்:—ஆனால் நான் சொல்வதைச் சமாதானத்துடன் கேட்கலாமன்றோ?

கோவ:—அப்படியே!

கண்:—பின்பு அப்படி யல்ல இப்படி யல்ல வென்று ஆட்சேபிக்கக் கூடாது! தங்களுக்குத் தெரிந்ததைத்தான் நான் சொல்லப் போகிறேன்!

கோவ:—நீ என்ன சொன்னபோதிலும் கேட்கிறேன்! சொல்!

கண்:—நாதா!

† "காமமே குலத்தினையும் நலத்தினையுங்
கெடுக்கவந்த களங்க மன்றிக்
காமமே தரித்திரங்க ளனைத்தினையும்
புகட்டிவைக்குங் கடார மற்றுங்
காமமே பரகதிக்குச் செல்லாமல்
வழியடைக்குங் கபாட மின்னுங்
காமமே யனைவரையும் பகையாக்கிக்
கழுத்தரியுங் கத்தி தானே!"

உலகத்தில் அடைதற் கரிய பொருள் காதல். காதலிற்குப் பெருந்தடையா யுள்ளது காமம். நல்லபயிர்விளைந்து வரும்போது அதனுடன் களையுந்தோன்றி அப்பயிரை எவ்விதமழிக்கிறதோ அவ்விதமே காமம் காதலை அழிக்கும் வாளாகவிருக்கிறது. பயிரைக் காப்பாற்றுவதற்கு களைபிடுங்கவேண்டுவது அவசியமாயிருத்தல் போல காதல் என்னும் அரும்பெருந்தனத்தைப் பெறுதற்குக் காமம் என்னும் சத்துருவை வெல்ல வேண்டும். காதல், காமம், இவையிரண்டிற்கு முள்ள வித்தியாசம் நண்பகலிற்கும், நள்ளிருளிற்கும் எவ்வளவோ அவ்வளவிற்கு மேலாகும். தலைவ! எல்லாமறிந்த தாங்கள் கேவலம் பால்ய சேஷ்டையா லுண்டாகும் காமவயப்பட்டு, அன்பென்பது சிறிதுமற்ற பரத்தையைக் கூடி வாழுதல் தகுமா? தாங்கள் கொண்டிருக்கும் அன்பு இத்தகையதென அம்மாதவி அறிவாளா? பொருள் அபகரிக்கும் நோக்கமே பெரிதுமுடைய தாசியை நம்புதல், தங்களைப் போன்ற அறிவாளிகளுக்கு அழகோ?

"அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியா—ரின்சொ லிழுக்குத் தரும்" என்னும் நீதிவாக்கியத்தை மறந்து விஷத்திலுங்கொடிய தீமைபயக்கும் வார்த்தைகளை அமிழ்தம் போலப் பேசும் அப்பரத்தையின் சொல்லைத் தாங்கள் கேட்டபடியா லன்றோ என்னை அலட்சியஞ்செய்தீர்கள்! நாதா! என்னை அலட்சியம்செய்ததற்காக நான் வருத்தப்படவில்லை. நிறைந்த தேனடையிலுள்ள தேனை உண்ணாமல் சிறிய புஷ்பங்களிலுள்ள அற்பத் தேனையுண்டு மயங்கும் வண்டினம் போலக் காதலால் விளையும் அழிவற்ற பேரின்பத்தை நாடாமல், சிறிதுகணந் தோன்றி அழியும் அற்ப சிற்றின்பத்தைப் பயக்கும் காமம் என்னுங் கொடிய வலையிற்சிக்கி வருந்துகின்றீர்களே என்றுதான் நான் வருந்துகிறேன்!

"தினைத்துணை யுள்ளதோர் பூவினிற்றேனுண்ணாதே நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தோறு மெப்போதும் அனைத்தெலும் புண்ணெக வானந்தத் தேன்சொரியுங் குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ" என்று ஆன்றோரால் புகழப்பட்டுள்ள இறைவனுடைய சொரூபமே "காதல்" மயமாகவுள்ள தென்றால் காதல் என்னும் தேனைச் சொரிகின்ற உண்மை அன்பை நான் எங்ஙனம் புகழ்வேன்! அவ்வன்பு இரண்டு உயிர்களிடத்திலும் தோன்றுமேயன்றி ஒரு உயிரிடத்தில் தோன்றாது! தோன்றினும் பயனில்லை! மேலும், கோவல! ஏகபத்தினி விரதமுடையவனே மனிதன்! பரஸ்திரீகமனஞ் செய்வதைவிடப் பாதகமானதொழில் வேறில்லை யென்பதைத் தாங்களறியீர்களா? ஸ்திரீகளுக்கு "கற்பு" என்னும் விரதம் ஏற்பட்டிருப்பது போலவே புருஷர்களுக்கும் ஏற்பட்டிருக்கிறதென நான் நினைக்கிறேன்! நான் இவ்விதமெல்லாம் சொல்லுகிறேனென வருத்தப்படாதீர்கள்! கணவர் சொற்படி நடப்பதே பெண்களின் கடமை. தங்கள் மனதி லுள்ளதைச் சொல்லுங்கள்.

கோவல:—(தன் தேவியை நோக்காது பூதேவியை நோக்கிய வண்ணம் நிற்கிறான்).

கண்:—தலைவ! நான் இவ்வளவு சொல்லியும் இன்னமும் பரஸ்திரீகமனஞ் செய்கிறீர்

களே! (தேவந்தியை நோக்கி) தோழி! அதோ பாரடி! என் நாதன் என்முகத்தைப் பார்க்கக் கூடாதெனப் பூமிதேவியின் முகத்தைப்பார்க்கிறார். அதுபரஸ்திரீ கமனந்தானே! (சிரிக்கிருள்).

தேவந்:—அதேதான் அவருக்குத்தொழிலாக விருக்கிறதே அம்மணீ! மாதவிக்குக் கொடுக்க ஒன்றும் பொருளில்லைபோல் இருக்கிறது. அதனல் தான் இன்று அந்தப்புரத்திற்கு வந்தார்.

கண்:—ஆமாம். அவருடைய முகத்தைப் பார்த்தால் பொருளின்றி வருந்துவதாகவே தெரிகிறது! (கோவலனுடைய தலையை நிமிர்த்தி) காதல! ஏன்விசனமாக விருக்கின்றீர்கள்?

கோவ:—விசனமொன்று மில்லை. நான்—

தேவ:—மாதவி யிருக்கும்வரையில் விசனமென்ன!

கண்:—போதும். சகி! சும்மாபரிகாசம் செய்தால் என் நாதருக்கு மனவருத்த முண்டாகும்; பேசாதிரு!

தேவ.:—நான் ஒன்றும் பேசவில்லை இனிமேல்!

கண்:—நாதா! என தருமைக்காதலா! தீங்கள் ஏன் வருத்தப்படவேண்டும்? அடியாளுடைய உடல் பொருள் ஆவி மூன்றும் தங்களுடைய தன்றோ! பொருளில்லையே என வருந்தாதீர்கள். கண்ணகியாகிய நான் இருக்கும்வரையில் தங்களுக்கு விசன மென்பதே வேண்டாம். தங்களுக்குப் பிரயோசனப்படா உடைமை இருந்துபயனென்ன? என்னிடத்தில் இரண்டு சிலம்புகளிருக்கின்றன. அதைத் தருகிறேன். கொண்டுபோய் விற்றுப் பொருள் வாங்கிக் கொள்ளுங்கள். மாதவிக்குக் கொடுக்கப் பொருள்இல்லையென்று தாங்கள் வருந்த வேண்டாம். நீங்கள் விசனமின்றி இருந்தால் எனக்குப் போதுமானது.

கோவ:—பிராணசகி! நான்தான் முன்னமேயே என் குற்றத்தை ஒப்புக்கொண்டேனே. வீணுக ஏன் என்னைப்பரிகாசம் செய்கிருய்! மாதவியை இனித் திரும்பியும் பாரேன். அவளைப் பற்றி நான் விசனிக்கவில்லை.

கண்:—பின் எதைக் குறித்து விசனிக்கின்றீர்கள்?

கோவ:—எனது பெற்றோர் என்னைத் தனியாக வைத்து இல்லறம் செம்மையாக நடத்தும்படி அளவற்ற பொருளையும் கொடுத்தார்கள். நானே சகலபொருளையும் தீயவழியிற் செலவு செய்து விட்டு இப்போது வருந்துகிறேன். வெளியூருக்குச் சென்று ஏதாவது வியாபாரஞ்செய்து பொருள்தேடி வாலாமென உத்தேசிக்கின்றேன். உன்னுடைய அனுமதி வேண்டும்.

கண்:—நாதா! என் அனுமதியா, நானும் கூட வருகின்றேன். வழியில் தங்களுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்து தங்களை இன்புறச் செய்த லன்றோ அடியாளுடைய கடன்.

* எப்பணியா லின்புறுவர் காதலரக் காதலரை
யப்பணியா லப்பொழுதே யின்புறுத்தி—யொப்ப
மனங்குழையும் வண்ண மகிழ்விப்ப தன்றே
கனங் குழையார்கள் கடன்."

மேலும் காதல! தங்களுடன் இருந்து நான் படும் கஷ்டங்கள் எனக்குஇன்பமாகும். தாங்களில்லாமல் நான் அனுபவிக்கும் சுகம் துன்பமே யாகும். தாங்கள் இருக்கும் காடு எனக்கு நாடு. தாங்களில்லாத நாடு எனக்குக் காடே யாகும். தலைவ! கணவன் இறந்தபடின் அக்கணமே தானும் உயிர் நீத்தலும், கணவன் கஷ்டப்படும்போது உடனிருந்து அக்கஷ்டத்தைத் தானும் அனுபவித்தும், கணவன் பொருள் வேண்டும்போது அவனுக்கு

* பெருந்தேவனுர் பாரதம்.

உதவியும், அவனுடன் இனிய சொற்கள்பேசியும், அவன் கலவி கருதும்போது அவனது அபீஷ்டத்தை நிறைவேற்றியும், பிரிவாற்றாமையும், இன்னோ ரன்ன குணங்க ளெல்லாம் பெண்களுக்கு இருக்க வேண்டுவன வன்றோ? அவர்கள்தான் உண்மைக் காதலும் கற்பும் உடையவர்கள்.

† "சாவிற் சாதல் நோவின் நோதல்
ஒண்பொருள் கொடுத்தல் நன்கினிது மொழிதல்
புணர்வுநனி வேட்டல் பிரிவுநனி யிரங்கல்"

என்பது கற்புடைய ஸ்திரீகளின் இலக்கணமன்றோ? தங்களைப்பிரிந்து நான் எவ்வளவு சுகமனுபவித்த போதிலும் "பிரி வாற்றாமை" என்னும் துன்பத்திற்கு முன் அச்சுகங்கள் எம்மாத்திரம்? நாதா! நானும் கூடவருகின்றேன்.

கோவ:—வெளி யூர்களில் எவ்வளவோ கஷ்ட மனுபவிக்கவேண்டி வரும். நீயோ பெண். காடுமலைமுதலான வைகளில் நடப்பதற்கு உன்னால் முடியாது. நீ இவிடம் தானே இரு.

கண்:—நாதா! இவ்விஷயத்தில் தாங்கள் எவ்வளவு சொன்னபோதிலும் என் செவிக்கு ஏறமாட்டாது.

கோவ:—ஆனல் உன்னிஷ்டம். மதுரை மாநகருக்குச் சென்று வியாபாரம் செய்யலாமெனத் தோன்றுகிறது.

கண்:—என்னுடைய சிலம்பு இரண்டையும் விற்று அதிற்கிடைக்கும் பொருளையே முதலாகவைத்து வியாபாரம் செய்யலாம். என்று பிரயாணப்படலாம்?

கோவ:—நாளையிரவில் பிரயாணப்படுவோம். நாம் வெளியூர் செல்வது ஒருவருக்கும் தெரியக்கூடாது. இரகசியமாக இருக்க வேண்டும்.

† இறையனு ரகப்பொருள்.

கண்:—அப்படியே.

கோவ:—பிரயாணத்திற்குவேண்டு வனவெல்லாம் சித்தம் செய்துகொள். நான் போய் வருகிறேன். (அந்தப்புரத்தினின்றும் நிஷ்கிரமித்தில்).

நாகை, ஸி - கோபாலகிருஷ்ணன்.

---

## *Sita—A Tale of Hindu Domestic Life.*
## சீதா அல்லது இல்லறவாழ்க்கை.

### 27-வது அதிகாரம்.

தங்கம் காமேசுவரய்யர் எப்போது பிரித்துகொள்ளபோகிறாரென்று காத்திருந்தாள். இராமச்சந்திரய்யருக்கு காமேசுவரய்யர் சொத்துகிடைக்கிறதாவென்கிற அருயை அவளுக்கு வெகுநாள் இருந்து இப்போதுதான் அது நீங்கிற்று. ஆகிலும் காமேசுவரய்யர் மறுபடியும் இராமச்சந்திரனோடு சேர்ந்துவிட்டால் என்னசெய்கிறதென்று யோசித்து கடைசியில் இரண்டாவது குமாரனை காமேசுவ ரய்யருக்கு ஸ்வீகாரம் கொடுக்கிறதென்று தீர்மானித்தாள். காவாலி சுப்பய்யன் தன் குமாரனை காமேசுவர்யருக்கு ஸ்வீகாரம் கொடுக்க வேண்டுமென்றுதான் சாமேசுவரய்யருக்கும் இராமச்சந்திரனுக்கும் மனஸ்தாபத்தைக்கொண்டுவந்துவிட்டான். தங்கம் இவனை ஏமாற்றி தன் குமாரனை ஸ்வீகாரம் கொடுக்கவேணுமென்றுயோசித்தாள். கடைசியில் காவாலி சுப்பய்யன் ஜயில்போய் சேரவும் தங்கம் இது தான் சமயமென்று கண்டு காமேசுவரய்யருக்கு கொஞ்சம் கொஞ்சமாக உபதேசம் செய்ய ஆரம்பித்தாள். முதலில் காமேசுவரய்யருக்கு ஸ்வீகாரம் செய்து கொள்வதில் இஷ்டமில்லை. பிறகு தங்கம் கொஞ்சம் கொஞ்சமாக அவரை ஸ்தோத்திரம் செய்து அந்த ஊரில் பெரியோர்களென்று சொல்லப்படும் சிலவேஷதாரிகளைக் கொண்டு காமேசுவரய்யருக்கு உபதேசம் செய்ததிலும் அவர் அப்படியே சம்மதித்தார். ஆனல் அடிக்கடி மனம் கலங்குகிறவர் ஆதலால், தங்கம் எங்கேயும் வெளியே சொல்லாமல் வெகு இரகசியமாக காரியத்தை முடிக்கவேணு மென்று தீர்மானித்தாள். பட்டணத்தில் இருந்த இராமச்சந்திரய்யருக்கு மரியாதைக்குக் கூட கடிதம் எழுதவில்லை. இப்படி ஒருவருக்

கும் தெரியாமல் யோசனை செய்து தங்கம் உடனே ஒரு முகூர்த்தத்தை பார்த்து இராமச்சந்திரய்யர் பிரித்துக் கொண்ட ஒரு வருஷத்திற் கெல்லாம் தன் இரண்டாவது பிள்ளையை காமேசுவரய்யருக்கு ஸ்வீகாரம் கொடுத்து பூணுலும்போட்டு விட்டாள். பூணுலுக்கென்று காமேசுவரய்யருக்கு அதிகமாக கடன் வாங்க மனம் இல்லை; கடன் வாங்க ஒட்டமும் இல்லையென்பது அவருடைய சலங்கைபோட்ட மாடுகளுக்குக்கூடத் தெரியும். அதுகளை வண்டியில் கட்டினால் அதுகள் கடன் கடன் கடன் கடனென்று கட்டியம் கூறிக்கொண்டே போகும். ஆனால் இப்படி கடன் இருப்பது தங்கத்துக்கு தெரியவில்லை.

இராமசந்திரன் பூணூல் எவ்வளவு ஆடம்பரமாக நடந்ததோ அப்படியே என்பிள்ளை பூணூல் நடக்க வேணுமென்று சொன்னாள். காமேசுவரய்யருக்கு அவளை மீறி ஒன்றும் செய்யமுடியவில்லை. பிறகு அதற்கும் கடன் வாங்கி இராமச்சந்திரன் பூணூல் போலவே வெகு சிறப்பாக நடத்த ஆரம்பித்தார். தங்கத்திற்கும் ஸ்ரீனிவாஸ சாஸ்திரிகளுக்கும்உண்டான சந்தோஷத்தில் பூலோகத்தில் இருப்பதாக ஞாபகமில்லை; காமேசுவாய்யருக்கு ஆசார உபசாரம் செய்தார்கள். காமேசுவரய்யர் அப்படிப்பட்ட உபசாரத்தை எப்போதும் அறிந்திருக்கமாட்டார். தங்கம் இராமச்சந்திரன் பூணூலைவிட தன்பிள்ளை பூணூல் வெகு ஜோராய் நடந்ததாக பெருமைசொல்லிக் கொள்ளவேண்டுமென்று எண்ணி எல்லாம் வெகு தோரணையாகச் செய்தாள். ஆனால் தெய்வசங்கல்பமானது பூணூல் போடுகிற சமயத்தில்கூட கொட்டுமேளமே இல்லாமல் பூணல்போடும்படி நேர்ந்தது. இதுவும் கடவுள் செயல் அல்லவா! மேளகாரன்கள் பந்தலின் ஒர்புறத்தில் கீத்துக்களினால் போடபட்ட ஓர் அறையில் ஒரு மரத்தில் மத்தளங்கள் இரண்டையும் மாட்டி விட்டு வெளியே போயிருந்தார்கள். கமலாவடியிலிருந்து நாலு துஷ்டப் பையன்கள் கல்யாணத்துக்கு வந்திருந்தார்கள். இவர்கள் மத்தளம் பார்த்ததேகிடையாது இவர்கள் மத்தளத்துக்குச் சமீபத்தில்போகவும் அது காற்றில் ஆட ஆட அதற்குள்ளிருந்து ஓர் சப்தம்வந்தது. பையன்களொருவருக்கொருவர் ஆச்சரியப்பட்டுக்கொண்டு நிதானித்துக் கேட்டார்கள். சப்தம் அப்படியே வந்து கொண்டிருந்தது. பையல்களில் ஒருவன் 'எலே சேஷா! இரண்டு பெட்டிக்குள்ளும் ஆள் உட்கார்ந்துகொண் டிருக்கிறானடா' என்றான்.

சுப்பன்: 'எலெ பேசாதே! அந்த ஆளை மெள்ள பிடிக்கணுண்டா! சின்ன ஆள்போல் இருக்கிறது விடக்கூடாது!' என்றான்.

உடனே சேஷனும் சுப்பனும் ஒருபெட்டியைப் பிடித்துக்கொண்டார்கள். நாராயணனும் இராமுவும் மற்றொரு பெட்டியைப்பிடித்துகொண்டார்கள். ஒவ்வொருவனும் ஒரு கத்திகொண்டுவந்திருந்தான். உடனே கத்தியை யெடுத்து எல்லோரும் சந்து செய்து கையை உள்ளேவிட்டார்கள். சேஷன் கை சுப்பன் கையில்பட்டதும் சுப்பன் சேஷன்கை யென்பது தெரியாமல், 'எலே ஆள் அகப்பட்டாண்டா, விடாதே!' என்று அந்தக்கையை இழுத்தான், சேஷன் சுப்பன்கையென்று அறியாமல் 'ஆமாண்டா, விடாதே! ஆள் என்னைக்கூட உள்ளே இழுக்கிறாண்டா! விடாதே!' என்றான். இருவரும் 'விடாதே! விடாதே!' என்று கத்திக்கொண்டு இழுத்துக் கொண்டிருந்தார்கள்.

இதேமாதிரி மற்ற மத்தளத்திலும் இராமு நாராயணன் கையைப்பிடித்துக்கொண்டு ஆள் அகப்பட்டுவிட்டான் 'விடாதே! விடாதே!' என்று இழுத்துக் கொண்டிருந்தான். இப்படி இருக்கும்போது மேளக்காரர்கள் வந்து சேர்ந்தார்கள். அவர்களுக்கு மிருதங்கத்தின்தோல் அறுக்கப்பட்டதைப்பார்க்க வயிறு பற்றிற்று. அன்றையதினம் முழுவதும் மிருதங்கம் வாசிக்கமுடியாதே! கூலிபோச்சே! என்று கோபத்தால் நாலுபேரையும் குடுமியைப் பிடித்துக் கொண்டு அடி அடி யென்று அடித்தார்கள். இதற்குள் ஏகக் கூட்டம் கூடிவிட்டது. சிலர் சிரித்தார்கள். பையன்களைச் சேர்ந்தவர்கள் எப்படி பாப்பாரப்பிள்ளையைத் தொட்டு அடிப்பாயென்று மேளக்காரனிடம் சண்டைக்குப்போனார்கள், சிலர் அப் பையன்களுடைய துஷ்டத் தனத்துக்கு அதுவேண்டுமென்றார்கள். கடைசியில் அடிபட்ட பையன்கள் கொஞ்சதூரம் போய் சந்தோஷப்பட்டுக்கொண்டு 'எலே! அடிபட்டாலும் பட்டோம், அது மத்தளம் என்று தெரிந்ததடா!' என்று சொல்லிக்கொண்டார்கள்.

அது குக்கிராமமானதால் வேறேமத்தளர்கூட கிடையாது. மத்தளம் எடுத்துவரப்போக வேண்டுமானால் போய்வர ஒருநாள்முழுவதும் ஆகும். தங்கம் இப்படி இராமச்சந்திரன் மீது எடுத்ததற்கெல்லாம் அசூயைப்பட்டு போட்டி போட்டது பகவானுக்குக்கூட பொறுக்கமுடியவில்லை. கல்யாணத்தில்

தாலிகட்ட மறந்துபோவதுபோல் கல்யாணத்திற்கென்று தருவிக்கப்பட்ட நாகஸ்வரம் பூணூல் போடும் சமயத்தில் உபயோகப்படுத்தமுடியாமல்போயிற்று. பிறகு பூணூல் நடந்தது. தங்கம் காமேசுவரய்யருக்கு ஸ்வீகாரம் கொடுக்கும்போது அவருக்கு ஏராளமான சொத்து இருக்கிறதாக அவளுடைய எண்ணம். ஸ்ரீநிவாஸசாஸ்திரிகளும் அப்படியே எண்ணிக்கொண்டு தான் இராமச்சந்திரய்யரை ஏமாற்றிவிட்டதாக நினைத்து அதிக சந்தோஷமடைந்தார். இராமச்சந்திரய்யர் பட்டணத்தில் வெகு நன்றாய் படித்துக்கொண்டு பூவரசுநல்லூரைப்பற்றி நினைத்தால் கூட தோஷம் உண்டாகுமென்று வெறுத்து அதை மறந்தே இருந்தார். ஆனால் அவருக்கு ஒரு கவலை மட்டும் இருந்தது. தனக்கு வழக்கமாக வாரத்திற்கொருதரம் கடிதமெழுதிக்கொண்டிருந்த சீதா மூன்றுவாரமாக கடிதமேஎழுதவில்லை யென்பதே. இராமச்சந்திரய்யர் தினந்தோறும் காலை 8-மணிக்கு மாடியில் வெளிப்புறத்தில்வந்துநின்று எதிர்பார்த்துக்கொண்டே இருப்பார். தபால்காரன் வந்து இந்தவீட்டைத்திரும்பிப்பார்த்தால்கூட வெகு விரைவாய் கீழே ஓடுவார். அவனைப்போய் பார்ப்பதிற்குள் அவன் வேறே வீடு போய்விடுவான், இராமச்சந்திரய்யர் வெகுமனவருத்தத்துடன் திரும்பிவருவார். இப்படிப் பார்த்துப்பார்த்து பொறுக்கக் கூடாமல் தன் பெண்ஜாதிக்கு அடியில் வருமாறு ஒரு கடிதம் எழுதினார்.

"138 தம்புசெட்டி தெருவு,"
சென்னபட்டணம்.

" என் கண்ணுக்குக் கண்ணான என் சீதாவுக்கு உன் பிரியமுள்ள சந்திரன் அநேக ஆசீர்வாதம். க்ஷேமம். க்ஷேமத்திற்கு எழுதி அனுப்பவும். நான் உனக்கு மூன்று கடிதம் எழுதியும் நீ பதிலே எழுதவில்லை. பதில் எழுதக்கூட சாவகாசம் இல்லைபோல் இருக்கிறது. நீ என்ன செய்வாய்! ஒருவேளை என் ஞாபகமே உனக்கு இருந்திருக்கமாட்டாது. உன் மீது குற்றம் சொல்வதில் பிரயோஜநம் என்ன! பிறந்தகம்போன பெண்களுக்கு புருஷன் வீட்டு ஞாபகம்கூட இருக்குமா? வாய்திறந்து பேசக் கூடாத குரங்குகூட வல்லவா பிறந்தாத்துக்கு ஜலம் எடு என்றால் குடத்தைத் தூக்கிக்கொண்டு ஓடுகிறது! புக்ககத்துக்கு ஜலம் எடு என்றால் குடத்தைக் கீழே போட்டு விடுகிறது! குரங்குகளுக்கே அப்படி யிருக்கும்போது மனிதர்களுக்குக் கேழ்ப்பானேன்! இந்தக் கடிதம்கூட உன்சுகத்துக்கு இடஞ்சலா யிருக்கும்! உனக்கு உடைத்துப் பார்க்கக்கூட அவகாசம் இருக்கமாட்டாது! நானோ வேலையற்றவன்; உனக்குக் கடிதம் எழுதுகிறதுதான் வேலை. அப்படி உனக்கு அங்கே கடிதம் எழுதுவதற்குக்கூட சாவகாசம் இல்லாதபட்சத்தில் இனிமேல் எழுத வேண்டா மென்றாவது நீ எனக்கு தெரிவிக்கக் கூடாதா! அப்படியாவது இந்தக் கடிதம் கண்ட உடனே எழுதுவாய் என்று நம்புகிறேன்.

இப்படிக்கு உன்பிரியனான

சந்திரய்யர்.

இந்தக் கடிதம் போட்ட மூன்று நாளைக்கெல்லாம் தபால்காரன் ஓர் கவரைக் கொண்டுவந்து இராமச்சந்திரய்யரிடம் கொடுத்தான். இராமச்சந்திரய்யருக்கு வெகு சந்தோஷம். உடனே கடிதத்தை உடைத்துப்பார்க்க அதில் சடுதியில்வருமாறு எழுதியிருந்தது.

"பூலாவடி."

"என் உயிர்த்தோழரான என்பிராணநாதர் சந்திரய்யர் அவர்களுக்கு தங்கள் உயிர்த் தோழியாகிய சீதா அநேககோடி நமஸ்காரங்கள் செய்து எழுதிக்கொண்டது:—"

"இவ்விடம் க்ஷேமம். அவ்விடத்து க்ஷேமத்துக்கு எழுதி அனுப்பக் கோருகிறேன். தங்களுடைய கடிதம் எனக்குக்கிடைத்தது; புருஷர்களுக்கு ஒரு பாவத்தையும் அறியாத பெண்டுகள் மீது குற்றம் சொல்வது சகஜம்தானே! அதைப்பற்றி நான் முறையிட்டு என்ன பிரயோசனம்! நான் மூன்று கடிதம் எழுதியும் அதற்குப் பதிலே எழுதாமல் என் ஞாபகமே இல்லாமல் இருந்துவிட்டு, இப்போது அக்கடிதங்களே வரவில்லைபோல் எழுதியிருக்கிறதும் புருஷர்களுடைய சாமர்த்தியம்தான்! இந்த சாமர்த்தியம் பெண்டுகளுக்கு வருமோ! ஆனால் தங்களைக் குற்றம் சொல்வதில் பிரயோஜனமில்லை! தங்களுக்கு என்ஞாபகமே இல்லாமலிருக்கச் செய்தவள் சொன்னபடிதானே தாங்கள் கேட்கவேண்டும்! அவள் இதுவரையில் என் கடிதத்திற்குத் தங்களை பதில் எழுதும்படி உத்திரவு செய்ய வில்லைபோலிருக்கிறது! போகட்டும்! இப்போதாவது என்ஞாபகம் வந்ததே! என்ஞாபகம் வந்தும் குழந்தை இராஜகோபலன் ஞாபகம் தங்களுக்கு வரவில்லைபோலிருக்கிறது! இராஜகோபாலன் என்கிற குழந்தை இருக்

கிறதாக இப்போதாவது ஞாபகத்திற்கு வருகிறதோ, சற்று நினைத்துப் பாருங்கள்! இருக்கட்டும்! இதற்கெல்லாம் நான் நேரில் வந்து தகுந்தவழி சொல்லுகிறேன்! காமிகளுக்குள்ள தொழில் கடிதத்திலேயே வந்துவிட்டது! இல்லாமற்போனால் வந்த கடிதத்தை நீங்கள் மறைக்க நியாயமில்லை! உங்கள் ஊரில் உங்கள் காமேசுரய்யரவாளுக்கு பிள்ளைக் குழந்தை பிறந்திருக்கிறதாம் உங்களுக்குந் தெரியுமா? எல்லோரும் பத்துமாஸம் சுமந்துபெற்றும் குழந்தை பிறந்த வுடனே பூணூல்போட விடுகிறதில்லை! உங்கள் லட்சுமி அம்மாளுக்கு பிரஸவமென்கிற சிரமமே இல்லாமல் ஒரு குழந்தை பிறந்துவிட்டது. அது பிறந்தவுடனே பூணூலும் போட்டுவிட்டார்கள். குழந்தை பிறந்தது என்றால் விர்த்தி உண்டென்று எண்ணவேண்டாம். நமக்கெல்லாம் விருத்தி லாபம் செய்துவிட்டார்கள். இந்தரகசியம் ஒருவருக்குந் தெரியாதாம்! அந்த ஊரிலேயே அநேகருக்கு ஸ்வீகாரம் ஆனபிறகுதான்தெரியுமாம். இதுவும் ஒரு வேடிக்கைதான். இந்த வேடிக்கையோடு எங்கள் வீட்டிலும் ஒரு வேடிக்கை நடந்தது. எனக்கு பூவரசநல்லூரிலிருந்து என்சிநேகிதியும் எங்கம்மாளுடைய தங்கை பெண்ணுமாகிய மீனாக்ஷியிடமிருந்து இந்த சமாசார மடங்கிய கடிதம் ஒன்று வந்தது. தபால்காரன் என்தாயாரிடத்தில் கொண்டு வந்து கொடுத்தான். எங்கம்மா கடிதம் எங்கேயிருந்து வந்தது என்று அவனைக் கேட்டாள். அவன் பூவரச நல்லூர் மீனாக்ஷியம்மாளிடமிருந்து என்று சொல்லவும், எங்கம்மா தபால்காரனைப் பார்த்து 'ஏ பையா நீ எத்தனை மணிக்கு பூவரசநல்லூரை விட்டு பிறப்பபட்டே! மீனாக்ஷி சௌக்கியமா யிருக்கிறாளோ! இன்னும் வாய் சமாசாரமாக எதாகிலும் சொன்னாளோ! அவள் ஆம்படையான் ஊரில் இருக்கிறானா? காவேரியில் ஜலம் எவ்வளவு ஒடுகிறது?' என்று சண்டப்பிரசண்டமாய் கேள்விகள் கேட்க ஆரம்பித்து விட்டாள். நாங்கள் எல்லாரும் சிரித்துவிட்டு அவனை கேலிசெய்தோம். இதை நினைக்க நினைக்க எனக்கு இன்னும் சிரிப்பு அடங்கவில்லை. தாங்கள் விசாரிக்காமல் போன போதிலும் இராஜகோபலன் சவுக்கியமா யிருக்கிறானென்று நான்உங்களுக்குத் தெரியப்படுத்துகிறேன். எனக்குதங்களிடம் பக்ஷியாகவாவது பறந்து வந்துவிட வேணுமென்று ஆவல் இருக்கிறது! தங்களுக்கோ பக்ஷியைவிடவேகமாய் பறந்துபோய் என்னை மறக்க உபதேசம்செய்பவர்களிடம் போய் சேரவேண்டுமென்று இருக்கிறது! எல்லாவற்றிற்கும் நான் கொஞ்ச நாளில் அவ்விடம் பறப்புட்டு வருகிறேன்.

"பிரிய நாயகர் பாதத்தில் தங்கள் உயிர்த்தோழி" சீதா அநேக நமஸ்காரம்.

"சீதா."

இந்தக் கடிதத்தை இராமச்சந்திரய்யர் பார்த்து வெகு சந்தோஷமடைந்தார். இராமச்சந்திரய்யர் மனது பெருந்தன்மை யுள்ளதாதலால் அவர் காமேசுவரய்யர்செய்ததைப்பற்றி லக்ஷியம் செய்யவே இல்லை. வெங்கட்டராம சாஸ்த்திரி குமாரன் பூலாவடியைச் சேர்ந்த போஸ் டாபிஸில் போஸ்டு மாஸ்டராய் இருந்ததால் அவன் ஏதோ தன்கடிதங்களை ஒளித்து சீதா பதில் எழுதாமல் இருக்கட்டும் அதினால் ஸ்வீகார சங்கதிகள் தெரியாமலிருக்கட்டு மென்று செய்த சங்கதி யென்று ஊகித்தார். காமேசுவரய்யருக்கு சொத்துக்குத் தகுந்த கடன் வந்துவிட்டது. என்ன கடன் வந்தும் அவருக்கு செலவை மட்டுப்படுத்த முடியவில்லை. கடன் வரவர வெகுஅதிகமாய் விட்டது. அநேகர் வியாஜ்ஜியம்போட ஆரம்பித்துவிட்டார்கள். காமேசுவரய்யருக்கு ஒன்றும் செய்ய முடியவில்லை. பார்த்தார்! தங்கத்தைத் தன்கடனையெல்லாம் தீர்க்கும்படி கேட்டுக்கொண்டார்! தங்கம் இவர்கடனை நாம் ஏற்றுக்கொள்ள முடியாது என்று கவன மில்லாமல் இருந்து விட்டாள். ஸ்வீகாரம்ஆன ஒரு வருஷத்திற்கெல்லாம் காமேசுவரய்யருக்கு ஒத்தாசை செய்ய ஒருவரும் இல்லை. ஒருவன் வாரண்டு கொண்டுவந்து விட்டான். காமேசுவரய்யரிடம் சொத்து இருந்தவரையில் எல்லோரும் அவரைச் சுற்றிக்கொண்டே இருந்தார்கள். இப்போது அவருக்கு சொத்துக் குறையவும் முன் அவரிடம் சுற்றிக்கொண் டிருந்தவர்க ளெல்லாம் இப்போது அவரை வெறுக்கஆரம்பித்தார்கள். தங்கம் மற்றவர்களைக்காட்டிலும் அதிகமாக வெறுத்தாள். வாரண்டு சேவகன் இதுதான் சமயம் என்றுகண்டு தங்கத்துக்கு இரகசியமாக 100 ரூ கொடுத்து காமேசுவரய்யரைப் பிடித்துக் கொடுக்கச் சொன்னான். தங்கத்துக்கு காமேசுவரய்யருச்கு சோற்றுக்கு செலவாவதுகூட பொறுக்க வில்லை யாதலால் வாரண்டு சேவகனுக்கு ஒத்தாசை செய்ய ஒப்புக்கொண்டாள். வாரண்டுக்கு பயந்து ஒண்டிக்கொண் டிருந்த காமேசுவரய்யருடைய இருப்பிடத்தை தங்கம் சேவகனுக்கு நன்றாய்ச்சொல்லி பிறகு காமே

சுவரய்யரையும் உள்ளே ஒரு இடத்தில் ஒளியச் சொல்லி மெள்ள சேவகனை உள்ளே விட்டுவிட்டாள். சேவகன் வந்ததும் காமேசுவரய்யர் அகப்பட்டுக் கொண்டார். காமேசுவரய்யர் பிறகு வெகு வருத்தப் பட்டு தங்கத்தைப் பார்த்து தனக்கு எப்படியாவது ஒத்தாசை செய்யவேணுமென்று கேட்டார். தங்கம் நீர் என் பிள்ளையை ஸ்வீகாரம் செய்து கொண்டு கெடுத்தது போதாதா! அவனுக்கு கர்மமும் சிரார்த்தமும் தானே மிச்சம்செய்து வைத்தீர்! இன்னும் என் சொத்தையும் வாயில் போட்டுக்கொள்ளப் பார்கிறீரா! நான் மாட்டே னென்றாள். காமேசுவரய்யர் ஸ்வீகாரம் வேண்டாம் என்று சொல்லும்போதே தான் கட்டாயப்படுத்தி அவரை ஸ்வீகாரம் செய்து கொள்ள சொன்னதை தங்கம் முற்றிலும் மறந்து, பழியை இப்போது காமேசுவரய்யர்மீது போட்டாள். இந்த சங்கதிகள் இராமச்சந்திரய்யருக்குத் தெரிந்ததும் அவர் உடனே பட்டணத்திலிருந்து வந்து காமேசுவரய்யர் சொத்து கடன் எல்லாவற்றையும் ஒப்புக் கொண்டு அவரை அவமானப்படாமல் காப்பாற்றி அவரையும் பட்டணத்துக்குக் கூட்டிக் கொண்டு போனார்.

எஸ். இராமஸ்வாமி ஐயர், பி. ஏ.



---

## " Man is Man and Master of his Fate & Fortune. "

A CRITICAL STUDY OF THE TEMPLE TRADITION IN A RECENT FESTIVAL.

" Turn Fortune, turn thy wheel, and lower the proud ;
Turn Fortune, turn thy wheel, in sunshine, storm and cloud ;
Thy wheel and thee we neither love nor hate. Smile and we smile, the lords of many lands ;
Frown and we smile, the lords of our own hands ;
For man is man and master of his fate."—*Tennyson*.

" As I walked by myself
I talked to myself
And myself said this unto me:
Make friends with thyself !
Be true to thyself !
And thyself thy good angel be !"—*Anon*.

" சலனசக்தியை வெல்லவேண்டில், கரபாத்திரச்சாமி யாகவேண்டும். "

பேரன்புப் பகழ்.

" அன்பேயருளே இன்பே கனியே இன்னமுதேயுன்
கண்ணிற்பிறந்த கண்மணிக ளெத்தனைபேர் !
உள்ளங் கனிந்தாரை யுள்ளபடி போற்றுவாயே
உளங்கனிந்தேதான் வீழ்ந்தால் உவகையுட னேந்திடுவாய்
மண்ணில்வீழ்ந்ததானால் மாயைவந்து தொத்துமென்று
மார்பிலே தாங்கியம்மா மடியில்வைத்து வளர்ப்பாயே !
நீ ஆகாசகங்கையென்று நின்னையள்ளிக் குடிக்க வெண்ணி

அடுத்தடுத்து வருவாரம்மா அனந்தனந்தம் பேர்களுமே,
நீ கைக்கெட்டா கங்கையல்லோ வாய்க்கெட்டா விண்ணமுதே!"

"உள்ளதுணர்ந்து உளவறிந் துனைக்கண்டு
ஹிருதயமாம் கலசமதை யழுக்கறவே தான்விளக்கி
அன்பாங் கைநீட்டி யாதரவா யுனையேந்தி
ஆருமறியாத அம்பரத்தே தனியிருந்து
தன்னைத்தா னறியத் தபித்தவர்கள் தான்குடிப்பார்!
தபித்துக் குடித்தார்க்குத் தாகமது அற்றுப்போம்:
உண்டுகளித்தார் உளம்பெருகிப் பூரிப்பார்
இத்தனையும் சொல்லி எத்தனையோ எண்ணினேன் நான்:
எத்தனைதான் சொன்னாலு மேற்குமம்மா உன்றனுக்கு!"

—ஆனந்தத்தாய்மொழி, "அவள்பேரன்புப்புகழ்."

# "பந்தம்பறி" யுற்சவக்காக்ஷி.

[திருமயிலையில் 'புன்னையங்கானல் மடமயிலைக் கட்டிட்டங்கொண்டான் கபாலீச்சரமமர்ந்தான்' திருக்கலியாணம் செய்து கைலாசவாகனமேறித் திருவுலாவந்து, கூடியிருந்து, மறுநாட்காலையில் பக்தகோடிகளுக்கு உமாமஹேஸ்வரராயிருந்து தரிசனமளித்தபின், மாலையில் நாயகிசமேதராய் நகர்வலம் வரும்பொழுது, சிவபெருமான் சடையிலிருந்த கங்கையைக்கண்டு பேதபாவம்கொண்டு உள்ளே யூடல்கொண்ட நாயகி, திருக்கோயில் எதிர்வரவும், ஊடல்முற்றிச் சினமாகத் தன்கலைகளாம் (தீவர்த்திப்) பந்தங்களையெல்லாம் பறித்துக்கொண்டு தான்மட்டும் கோயிலிடமடைந்து, பகவானை முச்சந்தியில் விட்டுவிட்டுவந்துவிட, "பந்தம்பறி" கொடுத்துத் "திக்கற்றநாதன்போல்" சந்தியில் நின்றுகொண் டிருந்த ஸ்வாமியைக்கண்ணுற்று, "தம்பிரான்தோழர்" எனப்பேர்பெற்ற சுந்தரமூர்த்தியடிகள் பகவானிடம் சென்று பின்னசக்தியின் ஸ்வபாவத்தைச்சொல்லி அவருக்கு ஆறுதல் கூறுகிறபாவனையிது. "பற்றொன்று பற்றொன்று பவோபவம்" என்றபாவனு லக்ஷணத்துக்கிசைய, 'தம்பிரான் தோழர்' பகவானிடத்தில் பற்றிய பற்றொன்றே பாவனையாக விருந்து பேசுகிறார்.]

1. 'தம்பிரான் தோழர்' 'பவோபவ'ப் பிரலாபம்.
"குலஸங்கேத பாலிநியை நமஃ"

(1) சலனசக்தி யென்றுசொல்வர் சாதிகெட்ட லக்ஷ்மியை
மலினபுத்தி யென்றுஞ்சொல்வர் மாயைவென்ற தாயவள்காண்!
சலனசக்தி யென்றசெல்வி சகடக்கா லதுபோலே
† மலினபுத்தி யார்மனத்தை யுருளவைப்ப ளுண்மையிதே!

2. இதுவுமது:— "கௌளிநியைநமஃ" "குலயோகிந்யைநமஃ"

(2) உருளவைப்ப ளுண்மையிது! மருளவைப்பள் மாயையினால்!
தெருளவைப்பள் தேர்ந்தாரை! யிருளவைப்பள் திரிந்தாரை!
மருளவைத்து இருளவைத்து மாயைமனந் தானொழியத்
தெருளவைத்துத் துன்பொழிப்பள் தேவிசலந சக்களத்தி!

† காமசங்கல்பங்களையே செய்யும் அசுத்தமனத்தை.

3. இதுவுமது.—"அகுலாயைநம:"

(3) சக்களத்தியவள் நிச்சலதேவிக்குச், சலசுரூபமே யானவள்,
மக்களற்றவள் மாயாவிரூபி, மன்மதசுந்தரப் பேற்றவள்,
‡ நிஷ்களத்திலே நிர்மலதேஹி, சகளவடிவில் செந்தாமரையாள்,
$ புஷ்கரத்திலே புகுந்துவசிப்பள் புஷ்டியுடையவள் பாதகி!

4. பகவான் தன்தோழரிடம் 'பந்தம்பறி' செய்த தலைவியின்மேல் குறைகூறல்.

(4) பாதகியைநம்பிச் சாதனைசெய்தேன், பேரும்புகழும் பாவச் செய்தாள்!
சாதகியைநம்பிச் சாத்விகனுனேன் † சாதகிபாதகி யானுள்காண்
பாதகிகூடிக் கெடுத்தாளென்னைப் பாரிலுள்ளவர் தான்சிரிக்க!
சாதகியென்றுநான் நம்பினபாதகி சந்தியில்விட்டென்னை யோடிப்போனுள்!

5. இதுவும் பகவான் வாக்கு.

(5) ஓடிப்போனுளவள் சங்கைகெட்டு நாடிக்கொண்டேயொரு பாதகனை ¶
நாடிப்போனுளவள் பாதகனையென்று நாட்டிஅள்ளோர்கள் தான்சிரித்தார்.
நாடிப்போனவந்தப் பாதகனைத்தூக்கி நாட்டார்புகழவே யாட்டிவைத்தாள்
வாடிப்போனதோர் பூப்போலவனை யாட்டியவுத்துமே சீரழித்தாள்.

6. அவ்யாகிருதனைக்கூடி யழித்துத் தைஜஸனுக்கிப் பின்னுமவனை யிரண்யகர்ப்பனுக்கி விசுவன் வைசுவானர னுகச்செய்து, 'விராட்ரூபி' யாகக் கூடி யிருந்த கேட்டை யெல்லாம் கண்டு பகவான் தம்தோழரான சுந்தரமூர்த்தியிடம் பின்னும் தன் குறையைச் சொல்லிக்கொள்கிறுர்.

(6) சீரழித்தவள் சிரிப்பாணிகண்டாள் சாதிகெட்டவனைச்சேர்ந்திருந்தாள்!
பேரழித்து பெருமையுமழித்துச் †† சிறுமைப் பட்டவனேடேபோனுள்!
சீரழிந்துநான் சிரிப்பாணிப்பட்டும் சிறுமைப்படாமலே தானிருந்தேன்!
வேரழிந்துள்ள விஞ்ஞனவிஞரை வேண்டியவள்தானும் போயடைந்தாள்!

7 தன்னைப் பிரிந்த நாயகியின் செய்கையையும் தன்னிலையையும் பகவான் தோழர்க்குணர்த்துகிறுர்.

(7) போயடைந்தாளவள் போதையுள்ளாள் போதைமயக்கத்தை யொழித்தேனென்று
போயடைந்தாரைப்புன் முறுவலுற்றுள் : பொங்கிற்றவர்செல்வம்பாற்கடல்போல்;

‡ தேவியின் பிரகாச விமர்சரூபங்களை யந்தர்லக்ஷியமாகக்கொண்டு குறிப்பிட்டபடியென்க.

$ 'இச்சையுதித்தவிடத்திலே', அஃதாவது 'ஹிருதயபுண்டரீகத்தில்' என்று அர்த்தம் கொள்க. 'பௌஷ்கராகமம்' பார்க்க.

† ஆண்டிவேஷம் தரித்து அஸங்கனுயிருந்ததை விட்டு 'உமாமஹேஸ்வரராய்' கிரகஸ்தனுனதைச் சொல்கிறுர்.

¶ அவ்வியக்தமான 'அவ்வியாகிருதனைக்' குறிப்பிட்டபடியென்றுகொள்க.

†† ஸ்வயம் பிரகாசரான தன்னை மணந்துபின் 'இருளில் ஒளியாம்' தைஜஸனைச் சேர்ந்ததுபற்றி அவளைச் 'சிறுமைப்பட்டவன்' என்று இழித்துச் சொன்னுர்.

போயடைந்தேபின்னும் வெறுவனுற்றாள் விங்கித் தூங்கியவர் விழலுற்றார் !
† காயடைகிழங்கே தின்னுக்கொண்டு காற்றையொடுக்கி நான் தபஸிருந்தேன்.

8. பகவான் தபஸியற்ற 'தர்மஸம்வர்த்தனி'யாகவந்து தேவி வரித்ததைக் கூறுகிறார்.

(8) தபஸிருந்தேனென்று தேவியவள் தர்மஸம்வர்த்தனி யாத்தோன்றி
தபஸுக்குவந்தேன் கேள்வரமென்று தர்மஸம்வர்த்தனி தானிசைத்தாள்
தபஸிருந்தேநான் தேவியைக்கண்டேன் தர்மஸம்வர்த்தனி சொரூபமதா
தபஸுக்கிசைந்ததோர் தர்மஸம்வர்த்தனி தானேவேண்டினே னென்றுரைத்தேன்.

9. தர்மஸம்வர்த்தனியை யடைந்து சலனத்தை நீக்கியதுரைத்தல்.

(9) வேண்டினேன் வேண்டினபடியிருந்தாள் வேட்கையெல்லாமவள் தான்றுடைத்தாள்!
ஆண்டியேயானாலும் வேண்டேன்சலனத்தைவேட்கைதீர்த்தென்னை யாண்டவளே
வேண்டியேசலன சக்தியைநம்பிநான் பட்டதெல்லாம்போதும் பாருலகில்
ஆண்டியேயானாலும் ஆண்டாளுக்கடிமை யாகவேவேண்டினே னென்றுரைத்தேன்.

10. பேதத்தை யொழித்துத் தர்மத்தைவளர்ப்பதே சரியென் றிசைந்ததேவி அன்னபூரணி யாகிச் சிவனுக்குக் கரபாத்ரப்பிச்சையிட்டதை யுரைக்கிறார்.

(10) உரைத்தேனுண்மையை உள்ளதது வென்றாள்
‡ கரைத்தாள்தன் தேஹத்தை யப்புவி லுப்புப்போலே!
¶ பரத்தைமறைத்ததோர் பார்முதற் பூதமுன்
கரத்தைநிறைத் தென்றும் கார்க்கவேயென்றாள்!

11. கரபாத்திரப் பிச்சையிட்டதேவி, ஊடல் கொண்டசதிபதியிருவருக்கும் சமாதானம் செய்துவைத்த 'தம்பிரான்தோழனை'ப் பார்த்து ஆசிகூறி யருளமுதுபடியிட்ட சிறப்பைக்கூறுகிறது.—
சாட்சியாய்நின்ற சுந்தரர்வாக்கிது.

(11) கார்க்கவே யென்றாள் கார்முகில் போலொத்தாள் !
பார்க்கவே யென்றும் பரத்தைநீ யென்றாள் !
பார்க்கப் பார்க்கவே பரமும் கர மாச்சுகாண் !
கார்க்கவே ஐங்கரன் கரபாத் ரமா வுனையென்றாள் !

---

† "தேவியவள் புரம்விட்டுத் திக்கற்றநாதன்போல், ஆவிதனை யொடுக்கிக்கொண்டு அருந்தவங்கள் செய்துகொண்டு, தான்திகழும் சாம்பவரைக்கூடிவாழவேண்டுமென்று"

‡ ஏகைவ சக்தி பரமேச்வரஸ்யப்ரயோஜ னார்த்தாய சதுர்விதா பூத்.
போகேபவானி புருஷேஷு விஷ்ணு, க்ரோதேச காளி, சமரேச துர்க்கா."

¶ "மரத்தைமறைத்து மாமதயானை
மரத்தில் மறைந்தது மாமதயானை
பரத்தை மறைத்ததுபார் முதற்பூதம்
பரத்தின் மறைந்ததுபார் முதற்பூதம்."—திருமந்திரம்.

12. பாகவானுக்கும் தேவிக்கும் ஊடல் தீர்த்துவைத்த சுந்தரமூர்த்திகள் தேவியருளால் "காமேச்வரமுகாலோககல்பித ஸ்ரீகணேச்வராயைநமஃ" என்னும் இரஹஸிய நாம உண்மையை நிதரிசனமாய்க்கண்டு கிருதார்த்தரானதைச் சொல்லுகிறது.—சுந்தரமூர்த்திநாயனார்வாக்கிது.

(12) கரபாத்ர மென்றென்தாய் கசிந்துரை செய்தசொல்
கரபாத்ர மந்த்ரமாய்க் காதிலே நுழைந்தது
கரபாத்ர மந்த்ரம்பின் தந்த்ரமாய் மாறியே
† கரபாத்ர சாமியாம் யந்த்ரமா யிசைந்தது !

13. சுந்தரமூர்த்தி நாயனார் தன் ஸ்வானுபவத்தைச் சொல்கிறார்.

(13) இசைந்தது பார்யந்திரம் ஈஷணைத் திரியம்விட்டு !
இசைந்தது பார்சலநம் நிச்சலன தேவிபாய்
இசைந்தது பாருலகம் அப்போடுப் பதுபோல
இசைந்தது பாருடலும் உயிரோடொன் றாகவே !

14. சுந்தரர்தன் ஸ்வானுபவத்தைக்கொண்டு வேதசாஸ்திரங்களின் சத்தையெல்லாம் வெண்ணெயாய்த்திரட்டி யெடுத்துச்சொல்கிறார்.

(14) உயிரோ டொன்றாய் உடல்சே ரவுமே
தயிரோ டொன்றாய்ப் பால்சேர் தன்மைபோல்
உயிருட லென்னும் பேதம தொழிந்து
தயிரொடு பால்சேர் வெண்ணெய தாச்சே !

15. சுந்தரமூர்த்தியடிகள் பூரணத்தில் நிர்வாணதீக்ஷைபெற்று பகவானால் ஆச்சாரியாபிஷேகம் செய்யப்பெற்றபின், தான் மண்ணில்வந் துதிக்கநேரிட்ட பூர்வவாசனையைப்பழித்து, நித்தமுத்த சுத்தமாயுள்ள சுபவாசனையை யேற்றிச்சொல்கிறார்.
(ஸமயாச்சாரியரான சுந்தரர்வாக்கிது.)

(15) வெண்ணெய தானபின் மத்தடி படுவானேன் !
வெண்ணெயா யிருக்கநான் நெய்க்கழு வானேன் !
வெண்ணெய்தயிர் பாலுண்ண வேணமட்டும் தானிருக்க,
வெண்ணெய்தயிர் பால்விட்டு மண்ணையுண்ண வேண்டுமோ !

குறிப்பு:—இதனால் பூரணத்தில் ஸ்வானுபவம் சித்தித்தபின் சுகதுக்கரூப அலைகளால் முன்னும் பின்னுமடித்து மோதப்படப்பெறும் உலகானுபவத்திற் சிக்கியுழல வேண்டிய நிமித்தமில்லையென்றும், உலகானுபவத்தால் வரும் சுகபோகபோக்கியங்களெல்லாம் ஸ்வானுபவமுதிர்ச்சியில் சங்கல்பமாத்திரத்தாலே சித்திப்பதாயிருப்பதால், அபரோக்ஷஞானம் சித்திக்கப்பெற்றவருக்குப் பரோக்ஷஞானம் ருசிக்காதென்னும் உண்மையை உணர்த்தினபடி யென்க.

† துதிக்கையையே பாத்ரமாகக்கொண்டு மோதகமுண்பவராதலால் சித்தி விநாயகருக்குக் 'கரபாத்ர சாமி' யென்னும் பேர் பொருந்தவதாயிற்று. 'யந்திரம்' என்றாலும் 'தேஹம்' என்றாலும் 'மூர்த்தம்' ஒன்றையே குறிக்கும்.

16. உமையம்மை மயூரவடிவமாய் மஹாதேவரைப்பூஜித்து அவரைத் திருமணம் செய்து கூடல் ஊடல் ஆடிய 'புன்னைவன' க்ஷேத்திரமாகிய ஸ்ரீகபாலீச்சரத்தில் மெய்யன்பர்க் கமுதளிக்கும் பேரமுதையெளிதிற்பெற்றுய்யவேண்டில் 'கரபாத்ரம்சாமியாகக் கைநீட்டி நிற்கவேண்டும்' என்று முடிவுரைசொல்லி அனுபவாதீதமுரைக்கிறார்.

(16) மண்ணையுண்ண வெண்ணங்கொண்டால் சலனசக்தி தயைவேண்டும்
கண்ணைப்பிசைந் தழவேண்டும் காயகல்பம் தேடவேண்டும்!
என்னையாண்ட அன்னை தன்னைப் புன்னைவன மடமயிலைப்
பின்னையாண்டு ஊடல் தீர்த்தான் பேரமுதை யுண்ணவேண்டில்,—
கரபாத்ரம் சாமியாகக் கைநீட்டிநிற்கவேண்டும்!
கரபாத்ரம் நீட்டிநின்றால் அமுதளிப்பா னுளம்பூரிக்க!

ஸ்ரீ கல்பகாம்பாள் ஸமேத கபாலீச்சரர் திருவடிகளேசரணம்.

ஓம் தத் ஸத்.

---

## "THE COMING OF THE THEOSOPHICAL MILLENNIUM."

## "அவதாரபுருஷர் தோன்றும் கிரஹசார நிலை."

அவதாரபுருஷர்க்கு ஆயிரமாண் டென்பர். ஆண்டெனச் சொல்வதும் ஆரமேயாகும். ஆரமதாவதும் ஜோதி ரூபம்மே. காலத்திற் சோதியைக் கிரணமென்றுரைப்பர். கிரணமாவதும் வியஷ்டிபாவம்மே. வியஷ்டிக்கிரணம் சமஷ்டியிற் சூரியன். சூரியன் என்பதும் ஆதித்தன் தானே. ஆதித்தன்கலை பன்னிரண்டாமே. பன்னிருகலையும் பன்னிராதித்தனும். அண்டாதித்தன், பிண்டாதித்தன், என்னுமேயவற்றை எண்ணுவர் மேலோர். அண்டத்தி னுள்ளது பிண்டத்திலும் ஆமே. அண்ட பிண்டத்திலும் அவனே யொளிர்வன். அண்டபிண்டமும் சமஷ்டி வியஷ்டியே. சமஷ்டிபாவம் சங்கையில் ஒன்றே. ஒன்றே பலவாய்ப் பிரியினும் பொருந்தும். பலவுமொன்றுவதே பிரகிருதியிற் சமஷ்டி, வியஷ்டிபாவம் விரிந்ததில் ஒன்று. ஒன்றே பலவாய்ப் பிரிந்து விரிந்தபின், விரிந்ததில் ஒன்று வியஷ்டிபாவம்மே. சமஷ்டி வியஷ்டியைச் சங்கையால் உணர்த்துவான் "ஏகன், அனேகன் வாழ்க" வென் றோதினார். ஓதின வுண்மையை உணரா மூடர்கள் வாதில் நுழைந்து வழக்குரைத்துளறுவர். கோதில் உண்மையைக் குருமுகமறிந்தவர் வாதில் நுழைந்து வழக்குரைசெய்யார். காதல் நிறைந்தவர் காதியைநீக்கி ஹோமஞ்செய்தவர் ஹாதியைப் பற்றுவர். காதி, ஹாதியெனவித்தையிரண்டு. காதிவித்தைகாண் கர்மத்தை வளர்க்கும். கர்மிகட்கது காமத்தைமூட்டும். காமத்தைத் தஹித்துப் பின் காதியை ஓதினார் கௌடபாதர் அவரேயாவர். காமதஹனத்தைக்காணாதயோகியர் 'பாவனாபூஜையால்' ஹாதியைத் தொழுவர். பாவனாபூஜை செய்யும் விதமது பாவனோபநிஷத்திலே "பார்ப்பார்" பார்க்கவே. பார்க்கப்பார்த்துப் பிரயோகமுமறிந்து பூஜைமிகச்செய்வார் பூரணராவார். பூரணகாரணசாரணராவார்காரணகாரியத்தோரணையறிவார். ஹாதிவித்தையையனுசரித்தோதினர் ஹம்ஸனுமந்த ஆத்மனேயாவர். ஹாதிவித்தையால் ஆத்மனே யானவர் காதிவித்யையைக் கண்டனுபோகிப்பர். அனுபோகம் முதிர்ந்த ஆத்துமபூரணர் ',கைவல்யசித்தர்'' ஆகியும்பின்னர், மன்னுயிரைத் தன்னுயிராக்கொண்ட, மாதவரானதால் மனமிரங்கி,

பின்னும் பரையோக சாமர்த்தியத்தாலே, பாரினில் அவதாரமாகிநிற்பார். ஸநாதநதர்மத்தைச் சாதிக்கவென்றே ஜன்ம மெடுத்தவர் ஜகத்திலே வாழ்வார். தாமரையிலையிற் றண்ணீர்போ லிருந்தவர் ஒட்டியு மொட்டாமலே யுழைப்பர். இப்படியவதாரம் ஆகும் புருஷர்க்கு ஆனதோர்சங்கியை ஆயிரமே. ஆயிரமான சங்கியையை உலகத்தோர் ஆயிரம் ஆண்டாய் அநுசிந்திப்பார். மாதவர் அஃதை "ஆயிரம் ஆரமாய்" ஆத்மபூரணத்தில் தொழுவர். ஆத்மபூரண மிருக்குமிடமது "ஸஹஸ்ராரம்" எனப் பேர் பெறுமே. இப்படியாக "மில்லந்நியம்" (Millennium) என்று சொல்லும் ஆயிரத்தின் பாவனை ஐதிகபாவத்தால் ஆண்டாமே. ஐதிகத்தைப்பொட்டி அவதாரபுருஷரின் ஆத்மவுண்மையை யினிச்சொல்வோம்.

இப்படியாக அவதாரபுருஷர்க்கு ஆயிரம் ஆண்டென்பர் ஐதிகபாவம் தான்முதிர்ந்தோர். ஆண்டாயிரமே, யாணுமவர்கள், இருப்பது எப்பவும் "ஸஹஸ்ராரமே". மனுபுத்திரர்கட்கு மண்ணில் நூறு ஆமுண்டு. நூறாந்தனையே நூற்றாண்டாக்கி அண்டத்தின் அளவால் அதையுரைப்பர். அதுவே மண்ணில் மனிதர்க்குப்பூர்ண ஆயுசு வென்பர். மண்ணில் நூறாய்விளங்குமதே விண்ணில் ஆயிரம் ஆகிவிடும். எப்படியெனிலோ, இயம்பக் கேண்மின்: பிரகிருதியெப் பொழுதும் நவாத்மக மானது; தசமியிலிருப்பது புருஷதத்துவம். ஒவ்வொன்றும் பத்துக்கூறாய் விளங்கும் வியஷ்டிபாவம் மேலிடவே. நவாத்மகமான பிரகிருதி ஒன்பதும் ஒன்றுபத்தாகவிருந்திடலப்போ, ஒன்பதே தொண்ணூறதுவாமே. அப்பாலுள்ள தசமியில் பத்துள தஃதைச் சேர்க்கில், தொண்ணூறும் பத்தும் நூறாமே. நூறான இந்த சங்கியை தானே பூரண ஆயுஸென்பர் மனிதர்கட்கு. சாதகபுருஷராமனிதர்க்கொன்றாவது சாத்திய சித்தர்க்குப் பத்தாமே. ஆகவே சாதகர்க்கு "நூறாம்" ஒன்றது சாத்தியபுருஷர்க்கு நூறுபத்தாம். நூறுபத்தான ஆயிரமஃதையே சித்தர்வய தென்றுசாதிப்பர். சித்தர் இருப்பது காலங்கடந்த புருஷதத்துவம் அதிலேயே. தத்துவமான புருஷனிருப்பதும் தசமியிலென்று ஓதினோமே. தசமியிலுள்ளபுருஷதத்துவத்தில், புருஷன் ஒருவன் என்றுமுளான். 'தத்துவமெங்குண்டு தத்துவனங்குண்டு' என்னும் திருமந்திரத்தாலே, மந்திரமாமந்த புருஷதத்துவனே தந்திரமாகவும் உத்பவிப்பன். மந்திர தந்திர உற்பத்தியைப் பௌஷ்கராகமத்தில் தான்பார்க்க. "பிந்துவென்றால் என்ன?" வென்று, போதபூரணத்தி லுரைத்த பதிகம்பத்தாலும் உணரலாமே. * மந்திர தந்திரமான அவனே ஹம்ஸனும் ஆத்மனுமா யிருப்பன். மந்திர தந்திரத்தால் மண்ணிலுதிப்பானை "அவதார புருஷன் எனச் சொல்வார். அவ்வதாரமானவன் ஆத்மபுருஷனே; ஆத்மனே யவதார புருஷனுமாவன். அவதார புருஷன் தோன்றக் கிரகநிலை ஒன்பதும் ஒன்றாய்ச் சேரவேண்டும். கிரகங்கள் ஒன்பதும் ஒன்றாய்ச் சேரின் சமஷ்டிபாவம் தானுதிக்கும். சமஷ்டிபாவத்தில் உதிக்கும் ஆத்மனே "அவதார புருஷன்" எனக்கொள்க. இத்தனையும் சொல்லி நிற்கையிலே "பூர்ணசந்திரோதயம்" என்னும் பத்ரிகையொன்று தான் கிளம்பி பார்வைக்கு முன் வந்து நிற்கிறது. நிற்கிற பத்ரிகையைத் தான் பார்த்து நித்யமா யுள்ளதை யெடுத்துரைப்போம்:

"இக்காலமே நன்மையைக் கொடுக்கும் நற்காலம்" எனப் புகழுமது. காரணம் கேட்கில், "மஹாபுருஷர் அவதாரம் ஆகவேண்டிய காலம்" எனவுரைக்கும். பின்னுமது சொல்வதைச்சுடக் கேண்மின்:—

* இந்த விவேகசிந்தாமணி யின் 14 - 1 - ம் பக்கம் பார்க்க: உமாமஹேசுவரர் திருக்கல்யாண மஹோற்சவக் காட்சி: கோயிற் றிருப்பதிகம்: "பிந்து வென்றால் என்ன?"

"இவ்வருஷம் ஜனவரியீ 11 உயில் கிரகங்களின் நிலையால் அவதாரருஷர்கள் ஜனிக்கும் உற்ற காலம் என்று அறிகிறோம். அனேக ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு கிரகசாரம் இவ்வித மிருந்ததாம் சுமார் 10,000 வருஷங்களுக்குமுன் இவ்வாறு இருந்தது என்று ஜோதிஷசாஸ்திரியான ஸட்கிளிப் என்பவர் சொல்லுகிறார். அம்மஹா புருஷர் சுமார் 30 - 40 வருஷங்களுக்குள் நம்முடைய ஊனக்கண்ணுக்கு முன்தோன்றுவரென்று பிரஹ்மஞான புத்தகங்களின் (Theosophical Books) மூலம் தெரிய வருகிறது."

அவர் எப்படி இருப்பரென்னில் பின்வருமாறு அவர் இலக்ஷணங் கூறுகிறார்.

"வானத்தில் மண்ணில் பெண்ணில் மைந்தரில் பொருளில் ஆசை, தானற்றுத் தமையும் நீத்துத் தத்துவ முணர்ந்த யோகர் ஞானக்கண் கொண்டேயன்றி நாடருஞ் ஜோதி, மண்ணோர், ஊனக்கண் கொண்டுமெகாண உடன்விளை யாடல் செய்வான்."

"ஞானக்கண் கொண்டேயன்றி நாடருஞ் ஜோதி" நிமிஷத்துக்கு நிமிஷம் உண்மையுணர்ந்த உத்தமர் தம் புனித உள்ளத்திற் பிறந்து கொண்டே யிருக்கிறது பிரத்தியக்ஷ பூர்வகமாக ஞானிகள் அறிந்துள்ளதோர் அனுபவமாம். அப்படிப்பட்ட பரஞ்ஜோதியானது "மண்ணோர் ஊனக்கண் கொண்டும் காண உடன்விளையாடல் செய்வான்" என்றதனால், "அவதார புருஷராய்" த் தோன்றுவர் என்று சொல்கிறார். ஸ்ரீகிருஷ்ணபகவான் அர்ச்சுனனுக்குத் தன் ஸ்வரூபத்தைக் காட்ட வேண்டி "ஞானசட்சுஸ்" கொடுத்துப் 'பார்'! என்றார். அவன் ஊனக்கண்ணுக்கு ஸ்ரீகிருஷ்ணன் மச்சானாகத்தான் பட்டார். அப்படியே "மண்ணோர் ஊனக்கண்கொண்டு" பார்ப்பது ஊனமாகவே தானிருக்கும். ஞானக்கண் உண்டானால் அவதாரபுருஷர்களை எப்பொழுதுந் தரிசிக்கலாம்.

மூலக் கொள்கைகளான ஸநாதனதர்மங்களின் ஜயமே "அவதார லீலை." வல்லவருக்குப் புல்லுமாயுதம் என்பதுபோல, தர்மம் தலையெடுக்கும் காலம் வந்தால், ஒவ்வொருவர் உள்ளத்திலும் தர்மசிந்தை யுதிக்கும். இதுவே அவதார புருஷர் உதிப்பதற்கான நல்லகாலம். ஆகையால் "ஸத்யம் வத: தர்மம் சர" என்னும் வேதவாக்கை யனுஷ்டித்து ஜனங்கள் எப்பொழுது ஏகோபித்து நடக்கிறார்களோ அப்பொழுது அவர்கள் தர்மசிந்தை யெல்லாம் கூடி யுருவெடுத்ததுபோல் ஒரு உருவம், ஒன்றாகவோ, பலவாகவோ ஒன்றிற்பலவாகவோ பலவிலொன்றாகவோ தோன்றும். ஆகையால் "நமச்சிவாய வாழ்க, நாதன்தாள் வாழ்க, இமைப்பொழுது மென்னுள்நின்று நீங்காதான் தாள்வாழ்க" வென்று ஜனங்கள் ஏகோபித்துத் தத்தம் ஹிருதய மத்தியிலுள்ள தஹராகாசத்தில் எப்பொழுது இறைவனை இடைவிடாது தொழுது துதிக்கிறார்களோ அப்பொழுது அதுவே "நற்காலம்" ஆகும். அக்காலத்தில் "எண்ணினார்க் கெண்ணினபடி யிருந்தருளீயு மீசன்" "ஏகன், அனேகன் வாழ்க" வென்றபடி ஏகனாகவும் அனேகனாகவும் இருந்து அருள் சாதிப்பன். இதுவொன்றே யொருகாலும் பொய்க்காத உத்தம "கிரகசாரநிலை."

"பக்தமான ஸஹம்ஸிகாயை நமஃ" "முனிமானஸ ஹம்ஸிகாயை நமஃ" என்னும் இரஹஸ்யநாமங்களால், பக்தர்கள் மனஸிலும், முனிவர்கள் (Thinkers) மனஸிலும் ஹம்ஸமந்த்ர தேஹத்தோடு சதாசிவ மூர்த்தியாய் அவதரித்துச் சதா லீலைசெய்துகொண்டிருக்கும் பகவான் "மண்ணோர் ஊனக்கண் கொண்டு பார்க்க" ஏன் லீலைசெய்து விளையாடுவதில்லை? திருப்பதி மஹாத்மியத்திலே ஸ்ரீவேங்கடாசலபதி யவர்கள் ஆகாசராஜனோடு சம்பந்தஞ் செய்து "ஊனக்கண்கொண்டு பார்க்கவும் காண" லீலைசெய்துவர, அஃது அநர்த்தமாய் முடிந்தது கண்டு மௌனியாகி ஸ்வப்னாவஸ்தையில் மட்டும் தோன்றுவாராகி ஜாக்ராவஸ்தையில் காண்போர்க்கு சிலையாக அமர்ந்து நின்றார். "குழந்தையும் தெய்வமும் கொண்

டாடு மிடத்திலே" யென்பது பழமொழி யல்லவோ! பகவானைக்கொண்டாடாது ஊனைக் கொண்டு ஊனைவளர்த்து ஊனே பெரிதாய் நினைப்பார்க்குப் பகவான் ஊனே யுருவாய்த் தோன்றிக் கல்லாய்ச் சமைந் திருப்பதன்றி புருஷோத்தமனாக விருந்து "உடன் விளையாடுவது" எப்படி? விளையாடினாலும் அவன் விளையாட்டைக் காணக் கண்படைக்க வேண்டாமா? "அந்தர் முகத்திலே" ஆராதிப்பதற் கெளியவரான, பகவான் "பஹிர்முக துர்லபா" என்றபடி பஹிர்முகத்திலே காணத் துர்லபமாய் விடுவார். ஆகையால் திருமூலர் ஓதிய திருமந்திரம் பொய்க்காது.

"முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு பார்ப்பதே யானந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றால் சொல்லுமா றெங்ஙனே!"

அவதார புருஷனைப் பக்தியென்னும் உள் நம்பிக்கை ஊன்றிப் பழுத்த ஊக்கண்ணா லன்றி "ஊனக்கண்கொண்டு காண்பது" எப்படி? ஊனமில் உருவை ஊனக்கண்கொண்டு பார்க்கில் ஊனமாய்த்தான் விளங்கும்.



# "The King is dead, Long Live the King."

## Reminescences & Recollections.

The following letters received 10 and 12 years ago are now first published, to show how King Edward the Man outshone the mere King. If the great Crown of the United Kingdom shed its luster on the brow of the man who wore it, the Man in turn shed more luster on the Crown, because the Light of his heart was greater than the brilliant gems that adorned the ancient Crown of England.

"*Marlborough House, Pall Mall, S. W. 28. July, 1900. Dear Sir,—I have submitted your letter and enclosures to the Prince of Wales. His Royal Highness desires me to express to Mr. Swaminatha Aiyar his best thanks for the copy of Verses which he has been good enough to transmit to him through you" Yours faithfully, Francis Knollys.*

(Now, Lord Knollys).

Miss Manning, the devoted Secretary of the National Indian Association, who had done so much to bring England & India together, & who visited the Editor of this Journal in his humble home in response to an invitation from himself & his wife, in a covering letter, says:—

"*I told the Private Secretary* (*to the Prince of Wales*) *that you were actively interested in the improvement of sanitation in Villages and Towns and in Education.*"

Two years earlier, on 24th Novr, 1898, Sir Francis Knollys had written in reply to a letter submitting a Copy of the Life of the Queen to the acceptance of His Royal Highness as follows:—Marlborough House, Pall Mall, S. W. 24, Novr, 1898. "Sir,—I

have submitted your letter to the Prince of Wales, and I am desired by His Royal Highness in reply to request you to thank Mr. Swaminatha Aiyar for the copy of the work on the Queen which he has transmitted to him through you. I am &c *Francis Knollys.*"

"This change of name from Black town to George town is made at the express desire of His Royal Highness the Prince of Wales to whom the popular sentiment in the matter has been represented."—Chief Secy. Mr. M. Hammick in the Fort St: George Gazette of 27th Jany. 1906.

## "வாழையடிவாழையாய் வாழ்கவேயரசு."

இந்த மேமீ 6உ வெள்ளிக்கிழமை இராத்திரி பதினொன்றே முக்கால் மணிக்கு நமது சக்ரவர்த்தியும் இராஜாவுமான மாக்ஷிமை தங்கிய ஏழாவது எட்வர்ட் அரசர் சுவாசக்குழலைப்பற்றிய நோயால் சிறிது காலமட்டும் அசௌக்கியமாயிருந்து திடீரென்று காலமானார். அவர் மூச்சடங்கவும் அரசுரிமை வேல்ஸ் இளவரசரான மேன்மை தங்கிய ஜார்ஜ் அவர்களதாக, அவர் ஐந்தாவது ஜார்ஜ் என்னும் பேரால் சீமைக்கு ராஜாவும் நமக்கு சக்ரவர்த்தியுமானார். க்ஷேத்திர க்ஷேத்ரஜ்ஞவிபாக யோகத்தையுள்ளபடி உள்ளாய்ந்தறிந்தவர்கள் "ஊனேமறிவதென்றாதேடாகாளம், உணர்வே ப்ரஹ்மமென்றாதேடாகாளம்" என்ற தத்துவராயர் வாக்குப்படி தேஹம் விழுந்துபோக தேஹி அஃதோடு அழியாமல், அழிவற்ற வஸ்துவாக ஆத்மஸ்வரூபத்தையடைந்து ப்ரஹமாத்மஐக்கியமாம் சாயுஜ்ய சாம்ப்ராஜ்யத்தை உடனேயேயோ அல்லது எஞ்சிநின்ற கர்மம் கழிந்த பின்னரோ அடைகிறான் என்று நன்றாக அறிவர்.

"அரசனிறந்தான் வாழ்கவேயரசுநீடூழியும்" என்னும் ஸ்த்யவாக்கு அரசன் மறித்தவுடனெழும் அசரீரியான பிரஜாவாக்கு. இதன் பொருளென்ன வெனில் தேஹமான அரசன் இறந்தான், தேஹியான அரசன் வாழ்க வென்பதாம். வாழையானது பலனையீன்றதும் நசித்துப்போவீது நிச்சயமானாலும், அதன் அடியிலிருந்து முளைகிளம்பி மேல்வாழை நசிக்குமுன் அடி வாழை தலையெடுத்துக் கிளம்பிவிடுகிறது சகஜமாயிருக்கிறது. ஆதலால் தான் "வாழையடிவாழையாக வாழ்க" வென்கிற மூத்தோர் வசனம் உண்டாயிற்று. அதன் கருத்து என்னவென்றால் மிருத்யுவசத்தனான(மரணத்துக்குட்பட்டவனான) மனிதன் தேஹமாத்திரத்தில் நாசசகிதனாயிருந்தாலும் தேஹிமாத்திரத்தில் நாசரஹிதனாயிருக்கிறான் என்னும் ஆத்மதத்துவ உண்மையை உணர்த்துவதேயாம். அதுபோல, அரசன் பிறப்பான் இறப்பான். அரசு பிறப்பிறப்பின்றி "வாழையடி வாழையாக" நீடித்து நித்தியவாழ்வெய்தியிருக்கும். அப்படியே தேஹோபாதிகனான மனிதன் பிறப்பான் இறப்பான். தேஹோபாதி நீங்கிய சமஷ்டிஜீவனான மனு "வாழையடி வாழையாக" நீடித்து நித்தியவாழ்வெய்தியிருப்பான். இப்படியாக, மனிதன் மிருத்யுவுக்கு (மரணத்துக்கு) உட்பட்டவனாயும், மிருத்யுவைக்கடந்தவனாகவு மிருக்கிறான். அதாவது காலாதீனனாயும், காலாதீதனாயுமிருக்கிறான். காலாதீனனான (காலத்தின் வசப்பட்டவனான) மனுஷன் காலாதீதனாவது (காலத்தைக்கடந்தவனாவது) எப்படி? பிராகிருததர்மத்தில் இதற்கு மரணம், மிருத்யுவென்றுபெயர்.

'ஊரெலாங் கூடி ஒலிக்க வழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமெனப் பேரிட்டு
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே.'

—திருமந்திரம்.

இது லோகாயத சம்பிரதாயமான தர்மம், தேஹத்தை அக்னிக் கிறையாக்கிச் சுட்டெரித்தாலும் சரி, பூமிக்கிறையாகப்பிரேதத்தைக் குழியிலிட்டு அடக்கம் செய்தாலும் சரி, ஐம்பூத சையோகத்தாலுண்டான ஸ்தூலதேகம் சையோகம் விட்டுப்பிரிந்து பஞ்சபூதங்களாக மாறுவது நிச்சயம். நமது எட்வர்ட் அரசரின் தேஹ அடக்கம், மேமீ 20உ வெள்ளிக்கிழமை யன்று மத்தியானம் நடந்தேறியது. அன்று உலகெங்கும் பரவியுள்ளபிரிடிஷ் இராஜ்யத்தில் எல்லாரும் தத்தம் தொழிலை விட்டு இறந்துபோன அரசனுக்காகத்துக்கம் பாராட்டினார்கள். உலகவழக்கில் இது சகஜமாம்.

காலாதீனன், காலாதீதனாவது எப்படி? யென்று கேட்டோம். பிராகிருதிதர்மத்தை விட்டு ஆத்மதர்மத்தையொட்டிப்பார்த்தால், அதற்கு உபாயம் வேறு இருக்கிறது. அந்த உபாயத்துக்கு "அத்யாத்மயோகம்" என்று பேர். க்ஷேத்திர க்ஷேத்திரஜ்ஞ சம்பந்தியான மனிதன், க்ஷேத்திர க்ஷேத்திரஜ்ஞ விபாகயோகத்தாலே, தேஹம், தேஹி யென்கிற தேஹாத்மவிசாரஞ் செய்து தேஹத்தைவிட்டு தேஹியை (ஆத்மாவை)ப்பற்றி நின்று, "காலவஞ்சனம்" என்னும் யோகசாதனத்தால், லயயோகத்தையனுசரித்து, தேஹாதீதனாய் (தேஹோபாதி ரஹிதனாய்) உன்மனியவஸ்தையடைந்து, மனோன்மனியைப் பூஜித்து அந்தப் பராசக்தியின் அருளால், தன் இச்சாமாத்திரத்தினாலே தேஹத்தை விட்டு தேஹிபாகிச் சாக்ஷி மாத்திரமாய் நின்று பார்த்திருப்பன். இப்படிப்பட்டவர்கள் யோகசித்தர்கள் என்று சொல்லப்படுவார்கள். * கிறிஸ்துவுக்கு இந்தச்சித்தியுண்டு. இவர்கள் அத்யாத்மயோகத்தில் சித்தியடைந்தவர்கள் என்பது கருத்து.

சாதன மின்றிச்சாதிப்பாரில்லை. யோக சாதனங்களில் பழகிவருகிறவர்கள் சாதகர்கள் என்று சொல்லப்படுவார்கள்.

சாதனங்களைப்பற்றிநின்று சாதித்த தீரர்கள் சித்தர்கள் என்று சொல்லப்படுவார்கள். உதாரணமாக, இவ்விவேகசிந்தாமணியைத் துவக்கும் பொழுது அஃதை 'அறிவைப்பரவச்செய்வதற்கான' தோர் சாதனமாகக்கொண்டு சாதகர்தேடி யதை நடத்தி வந்த "மாயாண்டிப்பிள்ளை" சாதகபுருஷனும். 'கிராமாண்டி' யென்று வெளிவந்தவர் அந்தமாயாண்டியின் பிரதிபாசமான (கண்ணாடியில் முகம் போலும் பிரதிபிம்பாரோப) வியஷ்டித்தோற்றம். கிராமாண்டியின் சமஷ்டிபாவம் மாயாண்டி. மாயாண்டியின் வியஷ்டிபாவம் கிராமாண்டி. அறிவைப்பரவச்செய்வதான தர்மத்தை யனுசரித்து அதையே கடைப்பிடியாகப்பிடித்து "அறிவேணுந்தேவியை" ப் பூஜித்து, அவள் பிரத்தியக்ஷமாகப்பெற்று, சாதிக்க யத்தனித்ததை சாத்தியமாகக்கண்டவர், "மாயாண்டிச்சித்தர்." இப்படி சாதனையைக்கொண்டு சாதித்தவரான சித்தபுருஷராம் மாயாண்டியினிடத்தே சமஷ்டி வியஷ்டி பாவங்களிரண்டு மொன்றாய்க் கலந்து ஏகிபாவப்பட்டிருக்கும். இனி அவர்தம் இச்சாமாத்திரத்தினாலே மாயாண்டியாகவும், கிராமாண்டியாகவும், 'மாயாண்டி, கிராமாண்டி, யெல்லாம் சேர்ந்து தன்னிலடக்கமான மாயாண்டிச்சித்தனாகவுமிருப்பர். இது ஸ்வானுபவத்திலிருந்து கண்டதோர் திருஷ்டாந்தம். இப்படியே ஒவ்வொருவரும் தம் கடமையை ஸ்வதர்மந்தப்பாமல் செய்வதினால் அக்கடமையைக் குறைவறச் செய்து முடித்தமாத்திரத்தினால் நிறைவெய்தி சாதனையைச்சாதித்துக்கொண்ட சித்தபுருஷராகலாம். "கொக்கென்று நினைத்தையோ கொங்கணவா!" என்று கேட்ட சிவவாக்கியர் பத்னியும் இல்லறதர்மத்தைக்குறைவறச்செய்து அதனால் சித்தியடைந்தவரல்லவோ! காலஞ்சென்ற நமது எட்வர்ட் அரசர் தாம் சாதனமென்று கொண்டதைச் சாதித்துக்கொண்ட "சித்தப்புருஷர்" என்பது நம்முடைய மதம் (அபிப்பிராயம்). எப்படியெனில், சொல்வோம்:—

* Vide, St. John X. 17-18.

முதலாவது இவரிடத்தில் ஜீவகாருண்யத்தின் பிரதிபாவமான (பிரதிரூபம் அல்லது சாயலான) அனுதாபசிந்தை பூரணமாயிருந்தது. 1875 - ம் வருஷத்தில் இவர் இந்தியாவுக்கு விஜயமாய் வந்திருந்த பொழுது அது பிரத்தியக்ஷமாயிற்று. பின்னர் 1898-ம் வருஷத்தில் நாம் விக்டோரியா மஹாராணியின் சரித்திரம் வெளியிட்டபோது அஃதை யவருக்கு அனுப்ப அவர் அதை யேற்றுக்கொண்டனுப்பியகடிதத்தால் இவர் அனுதாபகுணம் மேல்மினுக்கானதல்லவென்று தெரிந்தது. பின்னர் 1900 - ம் வருஷத்தில் இவர் உயிருக்கு ஆபத்து நேர்ந்த பொழுது இவருக்கு வாழ்த்துக்கூறி வெளிவந்த பாக்களடங்கிய விவேகசிந்தாமணி சஞ்சிகையொன்றை இவர்க்கு அனுப்ப, அப்பொழுது அவர் இந்த ஏழையினிடத்து எடுத்துக்கொண்ட சிரத்தையினாலும் அவருடைய "Best thanks" பூர்ணவந்தனத்தைச் சொல்லும்படியெழுதினதினாலும் அவர் பரமதயாளு என்றுநமக்குத்தெரியவந்தது. அப்பொழுது நாம் கிராமசுகாதாரத்தைப்பற்றிவனுவில் சிரத்தையெடுத்துக்கொண்டுழைத்து வந்தோம் வித்யாசம்பந்தமான விஷயங்களிலும் எப்போதும் போல சிரத்தை பூண்டுழைத்துவந்தோம். இது சங்கதிகளை நாஷனல் இந்தியன் அஸ்ஸோஸியேஷன் காரியதரிசியான மிஸ்மானிங் துரைசானியவர்கள், சென்னைக்கு விஜயமாய் வந்திருந்த பொழுது, ஊருக்குழைக்கிறவனென்கிற தயாவினால் இவ்வேழையின் வீட்டுக்குவந்து குஞ்சுகுழந்தைகளையும் பத்னியையும் பார்த்துச்சந்தோஷித்துப்போனவராதலால், இவன் செய்து வரும் வேலைகளை மேன்மைதங்கிய வேல்ஸ் இளவரசரான எட்வர்ட் அவர்களுக்குத்(அப்புறம் தான் அவர் பட்டத்துக்கு வந்தார்) தெரிவிக்க அவர் ஹிருதயமலர்ந்து, முன் பின் கண்டறியாத இவ்வேழையிடத்து ஊருக்குழைக்கிறவனென்கிற வாஞ்சையால் தயவுமிகக் கூர்ந்து விசாரித்து அவருடைய பூர்ணவந்தனத்தைத்தெரிவிக்கும்படி ஆஜ்ஞாபித்தார். அவருடைய காரியதரிசியான ஸர் ப்ரான்ஸிஸ் (இப்பொழுது லார்ட்) நோலிஸ் அவர்கள் அவ்வாஜ்ஞைப்படியெழுதியகடிதத்தில் 'His Royal Highness desires me to express to Mr. Swaminatha Aiyar his best thanks for the Copy of verses which he has been good enough to transmit to him through you" என்று எழுதியிருந்தார். இதை நாம் அப்பொழுது பிரசுரிக்கவில்லை. ஏனெனில், பரஸ்பரம் ஹிருதயபூர்வகமாய் உள்ளமுணரவுணர்ந்த விஷயங்கள் "அஹப்போருட்" தன்மைவாய்ந்தவையாய் விடுவதால், அஃதைப்பல்லாரறியப்பகர்ந்து கூறல் ஹிருதயத்துக்கு இதமாயில்லாதது பற்றியும், உண்மை உணரற்கரிதுபற்றியுமென்று கொள்க. இப்பொழுது வெளியிட்டதேனெனில் அரசாயிருந்து உலகறிய சமாதான புருஷர் (Peace - Maker) என்று பேர் பெற்று விளங்கின நமது அரசர் பட்டத்திற்கு வந்த மாத்திரத்தினாலேயே பேர் விளங்கப்பெற்றவராயின்றி ஏற்கனவேயவரிடத்திருந்த ஆத்மப்பிரகாசம் அவர்பட்டத்துக்கு வந்ததால் குன்றின்மேல் விளக்குப்போல் பிரகாசிக்கலாயிற்று என்பதை வற்புறுத்தவே யாம்.

அவர்பட்டத்துக்குவந்த பொழுது அவர் பிராணனுள்ளமட்டும் ஜனங்களுடைய க்ஷேமத்தையே நாடியுழைக்கக்கங்கணம் கட்டிக்கொள்வதாகச்சொன்னார். அவர் பிராணன் நீங்கிய வெள்ளிக்கிழமையன்றும் அவருடைய அந்தரங்ககாரியதரிசியான லார்ட்நோலிஸ் அவர்கள் தேகஜாட்டியமாயிருக்கையில் வேலை செய்ய வேண்டாமேயென்ன, அதற்கு அவர் "அப்படியில்லை: கடமையினின்றும் பின் வாங்கேன். கடைசிவரையில் செய்கடனைச்செய்தேதீர்ப்பேன்" என்று சொல்லித்தம் கடமையைச்செலுத்தினாராம். இப்படி ஸ்வதர்மத்தைக்காப்பாற்றிய உத்தமசித்தமுள்ளவர் தர்மசாதனமாகத்

தான் கொண்டதைச் சாதித்தவராகாரோ! அவர் தர்மசாதனையைச் சாதித்த சித்தபுருஷ ரென்பதே எல்லாருக்கும் சம்மதமாம்.

ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்ச்சுனனுக்கு உபதேசம் செய்து வந்ததில், "மனிதரில் நான் அரசனாவேன்" என்றார். ஆகையால் அரசன் ஆத்மஸ்வரூபனாயிருக்கத்தக்கவன். ஆத்மா வென்பது அறிவு. அறிவு தர்மஸ்வரூபத்தை ஆஸ்ரயித்து விளங்குகிறது. அதனால் தான் தர்மஸ்வரூபமான விருஷபம் அதற்கு வாகன மாகிறது. தர்மமழிந்துபோய் அதர்மம் தலை யெடுக்கும் போதெல்லாம் பகவான் தர்மத்தை நிலை நிறுத்தத் தான் அவதாரமாகிறதாகச்சொல்லியிருக்கிறார். தர்மம் தலைகாக்குமேயன்றி அதர்மம் தலைகாக்காது. தர்மஸ்வரூபியாக விளங்கிய அரசன் திடீரென்றிறந்தான் என்றால், தீர்க்கதரிசிகள் உள்ளத்தில் அதர்மம் தலையெடுத்ததால் தான் தர்மஸ்வரூபம் மறையலாயிற்றென்று தானே படும். தர்மாதர்மங்களுக்கு நியாமகனாயிருப்பவன் பகவான். அவனன்றியோரணுவும் அசையாது. தர்மஸ்வரூபியான நமது எட்வர்ட் சக்ரவர்த்தியாம் அரசர் உலகத்தாருக்குத் திடீரென்று மறைந்தாராயினும், திரிகாலஞானிகளான தீர்க்கதரிசிகளுக்கு அவர் அப்படி மறையநேரிட்டதொன்றும் அதிர்சயமாக விராது. கொம்பில் பழுத்துவிழுங் கனிபோல், வெம்பியதும் கொம்பில் நிற்காது. தர்மவிருக்ஷமாகிய இராஜ்யத்தின் பலனாயிருப்பது அரசு. அதர்மம் மலிந்ததானால் தர்மவிருக்ஷம்வாடிப்போகக் கொம்பிற்பலன் முதிராது வெம்பிப்போம். "யதாராஜா ததாப்ரஜா" என்பது போல, ராஜ்யதர்மம் எப்படியோ அப்படியே ராஜாவுமாகிறான் என்பதுண்மை. அப்படியென்றால் இராஜாவும் இராஜ்யதர்மமும் 'தர்மம், தர்மி (தேஹம்)' என்பது போல், அதாவது தேஹமும் அதன் தொழிலும் போல்இணைபிரியக்கூடாத தாதாத்மியசம்பந்தமுற்றிருக்கிறது. தேஹம் சரியாக விருந்தால் தான் தொழிலும் சரியாகநடக்கும். தொழில் சரியாக நடந்தால் தான் தேஹம் சரியாகவிருக்கும். இராஜா, தேஹம்; இராஜ்யபாரம், அதன் தொழில். இங்கிலாந்தில் இராஜ்யபாரமாகிய தொழில் தற்காலம் சிக்குற்றிருப்பது பிரத்தியக்ஷப்பிரமாணமாய் விளங்குவது. இச்சமயத்தில் அரசனிறந்தது அரசியல் தேஹத்துக்கு ஹானிவந்தது போலாம். இது யாவருள்ளத்திலும் உறுத்துவதா யிருக்கிறது. ஆயினும் "ஸர்வம் விஷ்ணுமயம்ஜகத்" என்றிருப்பதால், ஸர்வஜீவதயாபரரும் ஸ்திதிகர்த்தாவுமான விஷ்ணுஸ்வரூபமாய் விளங்கும் ஜகத்தானது நல்லதையே உண்டு பண்ணுவதாகுமென்பது சித்தாந்தம். ஏனெனில் எல்லாம் விஷ்ணுமயமாயிருப்பதாலும், விஷ்ணு ஸ்திதிகர்த்தாவாகவிருப்பதாலும். ஆதலால் தான் "அரசனிறந்தான் வாழ்கவேயரசுநீடூழியும்" என்று சொல்லும் அசரீரியான பிரஜாவாக்கியம் தத்துவார்த்தமான தென்று அதை நாம் விளக்கப்புகுந்தது. எட்வர்ட் அரசருக்குப்பின் பட்டத்துக்கு வந்த நமது ஐந்தாவது ஜார்ஜ் அரசரும் அவர் வழியில் நடந்து பழகினவராதலால் எல்லாம் சுபமாகவேமுடியும். இந்த திருடம் பற்றியே 'வாழையடிவாழையாக வாழ்கவேயரசு' என்று இதற்கு மகுடம் சூட்டினோம். இப்பொழுது பட்டத்திற்கு வந்திருப்பவர் 1906-ம் வருஷத்தில் தம் பத்னிசகிதமாய் இந்நகரிற்கு விஜயமாய் வந்திருந்தபொழுது "பிளாக்டவுன்" என்னும் பேரைமாற்றி "ஜார்ஜ்டவுன்" என்று அவர் பேரைச்சேர்த்து இந்நகரிலுள்ள "பட்டணத்துக்கு"ப் புதுப்பேர் சூட்டவேண்டுமென்று நாம் நாமதாரணையிலுணர்ந்த பொதுஜனாபீஷ்டத்தைத் தெரிவிக்க, அதற்கிணங்கி, அவரும், இந்நகரிலிருந்த ஒருவாரத்துக்குள் தம்மனமுவந்து "ஜார்ஜ்டவுன்" என்கிற பேர் விளங்கத் தம்பேரை இந்நகரில் நிலையாகஸ்தாபித்துப்போனார். ஆத

லால் பிரதிஷ்டாவிதிப்படி ஐந்தாவது ஜார்ஜ் அரசர் லண்டனிலேயிருந்தாலும், விசேஷமாய் அதிபூர்வமான இச்சென்னைமாநகரில் அவருடைய நாமரூப ஆத்மா வாசஞ்செய்து கொண்டிருக்கும். இதனால் இந்நகருக்கும் அரசுக்கும் ஒருவித விசேஷசம்பந்தம் கற்பிக்க இடமுண்டாகிறது. நாமாதரணையிற் பழகினோர் அந்த விசேஷம் இன்னதென்றும்,விசேஷபதார்த்தம் இன்னதென்றும் தாமேயறிந்து கொள்வார்கள். விசேஷம் எது வுண்டோ அதை ஆஸ்ரயிப்பது வைசேஷிகமதம். அம்மதப்படி தற்கால ராஜாவான ஐந்தாவது ஜார்ஜ் இந்நகரிலுள்ள நமக்கு 'சாமீப்பிய (சமீப) சம்பந்தி' யாகிறார். அதாவது நினைவில் நெருங்கிய சம்பந்த முள்ளவ ராகிறார். ஆகவே, "ஐந்தாவது ஜார்ஜ் அரசர் வாழையடி வாழையாய் வாழ்கவே" யென்று நாம் வாயும்மனமும் ஒத்து வாழ்த்துகிறோம்.

---

## In Memorium Verses to the Citizen-King & Emperor.

### காலஞ்சென்ற இந்திய சக்கரவர்த்தி அவர்கள்பால் எழுதிய சரம கவிகள்.

நேரிசைவெண்பா.

1 பண்டைமனு நிற்குவமை பார்காப்பில் ஆவான்கொல்
கொண்டபே ரெட்வர்டெங் கோமானே—விண்டுரைத்தால்
நின்னீதி யாவர்க்கும் நேராகும் அன்னவன்றன்
தன்னீதி வேற்றுமையே தான். (க)

2 மன்னுவென் றுறை மகிதலத்தி லேயழைப்போம்
பன்னுமே போற்றப் பரிந்துவந்து—சொன்னுமே
தன்னுலகம் நீத்துத் தரணியுளோர் துன்புறவே
பொன்னுலகம் சென்ற பொழுது. (உ)

3 அன்னையிடம் பெற்ற வரசுரிமை கைக்கொண்டு
சொன்னமொழி பொய்க்காது தொல்லுலகை—தன்னைநிகர்
முப்போது மில்லையெனு மொய்ம்புடன்ஆள் மன்னவனை
எப்போது காண்போம் இனி. (ந)

4 மண்ணரசை ஜார்ஜ் மகற்களித்துப் பண்புடனே
விண்ணரசு செய்தற்கோ, விக்டோர்யா—பெண்ணரசி
மாதாவைக் கண்டு மகிழ்தற்கோ, சென்றாய் கொல்
தாதாரும் பூந்தாராய் சாற்று. (ச)

5 பத்தொன்பான் நூறுடன்சேர் பத்தாண்டின் மேமதியில்
வித்தகம்சேர் ஆறிலவிர் வெள்ளியதாம்—முத்தித்
திருவமிகும் எட்வர்டெம் † சிமான்மன் ஈசன்
திருவடியிற் சேர்ந்த தினம். (ரு)

நா. சேதுராமய்யர்.

† Our Citezen - King, Edward.

# His Majesty's Message To India.

## மாக்ஷிமைதங்கிய நமது சக்ரவர்த்தியவர்கள் நமக் கனுப்பியிருக்கும் சமாசாரம்.

மாக்ஷிமைதங்கிய நமது சக்ரவர்த்தியும் அரசருமாகிய ஐந்தாவது ஜார்ஜ் அவர்கள் இந்தியாவிலுள்ள சிற்றரசர்களுக்கும் ஜனங்களுக்கும் ஒரு கடிதம் அனுப்பி யிருக்கிறார். அது கெஜட்டில் பிரசுரமா யிருக்கிறது. அதன் தமிழ்மொழி விளக்கம் இதுவாம்:—

"எனது அன்புமிகுந்த பிதா நாமெல்லோரும்துக்கிக்கத் திடீரென்று காலஞ்சென்றதனால், நான் நீண்டதும் பூர்வீகமானதுமான வோர் அரச வம்சத்தி லுதித்து அரசுரிமைக்குப் பாத்தியனான முறையில் ஸிம்மாசன மேற வாய்ந்தது. ராஜாவும் சக்ரவர்த்தியுமான முறையில் எனது இந்தியா நாட்டில் வசிக்கும் சிற்றரசர்களுக்கும் மற்ற எல்லா ஜனங்களுக்கும் அளவளாவி முகமன் கூறுகிறேன். என் பிதா மரணமடைந்தசந்தர்ப்பத்தில் இந்தியாவிலுள்ள பல்வேறு ஜாதி மத வகுப்பார்களும் பூரணமாய்க் காட்டிய ராஜ விசுவாசத்துக்கும் ராஜ கிரீடம் தரித்துள்ளவர்கள் பேரில் வைத்துள்ள விசேஷப் பிரீதிக்கும் நான் உங்களுக்கு ஹிருதய பூர்வகமாய் வந்தன மளிக்கிறேன்.

யாவராலும் கௌரவமாய்க் கொண்டாடப்பட்டு வரும் விக்டோரியா மஹாராணியவர்கள் 1858 - ம் வருஷத்தில் இந்தியாவின் இராஜ்ய பாரத்தைத் தாம் நேரில் வகித்த பொழுது இந்தியாவிலுள்ள சிற்றரசர்கள்மஹாஜனங்களுக்கு முகமன்கூறி ஒரு விளம்பரப் பத்திரம் அனுப்பினார். பிறகு 50 - வருஷங்களுக்குப் பின் பெரும் பிரக்யாதியும் பெற்று விளங்கிய எனது பிதா அந்த விளம்பரத்திற் கண்டவற்றை உறுதிப்படுத்தி ஒரு முகமன் பத்திரமனுப்பினார். இவை சக்ராதிபத்தியத்தாலுண்டாகும் மேன்மைகளையும் நன்மைகளையும், அவ்வாதிபத்தியத்தின் உத்தமபாவத்தையும் உண்மையான நன்னோக்கையும் விளக்குமோர் (விலையிலாச்) சாஸனங்களாம். அச்சாஸனங்களில் கண்ட உள்நோக்கத்தையனுசரித்து என்னுடைய காலத்தில் நானுள்ளவரையில் உண்மையாய் நடந்துகொள்வேனென்று உறுதியாய்ச் சொல்கிறேன்.

மாக்ஷிமைதங்கிய மாஜி அரசர் விருப்பின்படி அவருடைய உதாரணத்தைப் பின்பற்றி நான் எனது ராஜ பத்நியோடு ஐந்து வருஷங்களுக்கு முன்பு இந்தியாவிற்கு விஜயம் செய்தேன். சரித்திரத்திலே பேர்போன இராஜ்யங்களென்ன, எங்களது நாகரிகத்திலும் மிகப் பூர்வீகமான உங்களுடைய நாகரிக சின்னங்களென்ன, பூர்வீகமான, ஆசாரங்களென்ன, நடவடிக்கைகளென்ன இன்னுமவ் விசாலமான தேசத்திலுள்ள ஜனங்களென்ன, நாடு நகரங்கள், பட்டணங்கள், கிராமங்களென்ன, இவைகளையெல்லாம் நாங்கள் நேரில் பார்த்து இவற்றின் ஞாபகம் மனதில் உறையப்பெற்றோம். இப்படியெங்கள் மனதில் பச்சைமரத் தாணிபோல் பதிந்த எண்ணங்களும் ஜனங்களுடைய விசுவாசங்களும், இன்னுமந்த எங்களுடைய ஆச்சரியங்கள் நிறைந்த யாத்திரையில் மனதிற்பட்டவைகளுமான ஞாபகங்கள் ஒருகாலும் மறையா.

என் முன்னிருக்கும் உச்சிதமான, ஊக்கமிகப்பிடிக்கும் இராஜ கடமைகளைச் செலுத்துவதில் நீங்களெல்லாரும் உரியபடியே முனைந்து நின்று எனக்கு சககாரிகளாகவிருந் துதவுவீர்களென்றும், எனது ஆளுகையில் எப்போதும் எனக்கு உள்ளெழுச்சியை யுண்டுபண்ணுவதா யிருக்கத் தக்கதான இந்தியாவின் க்ஷேமத்தில் உண்மையானபடியே எனக்குள்ள அனுதாப சிந்தைக்கு அனுகுணமாய் நடந்து கொள்ளச் சித்தமா யிருப்பீர்க ளென்றும் உறுதியாய் உங்களெல்லா ரிடத்திலும் நம்பிக்கை யுற்றிருக்கிறேன்."

ஓம்

ஸ்ரீகிருஷ்ணாயநம:

# To Sri Krishna the God of Love.

## பரமாநந்தபாலகிருஷ்ணப்ரேமை.



இராகம் - செஞ்சுருட்டி.

*ரிமககரிஸ ஸாஸநிதபா தாஸரிமாகா*
*கமபப பாதா ஸாநிதபாம கமபமகரிஸ ரீகா.*

பல்லவி.

இந்தலூட்டி செய்யலாமோ யசோதைபாலா!
இந்தலூட்டி செய்யலாமோ சோதையுடைய பாலா!

சரணங்கள்.

(1) சாயக்கொண்டையும் சரிகைவங்கியும் சட்டமாகவே
மாரிற்பதக்கங்கள் அசைய அசைய மகனேயோடி வாடா! (இந்த)

(2) அச்சுதாநந்தா! ஹரிகோவிந்தா! உச்சிதமாக
இச்சையான வெண்ணெய்தயிர்பால் மகனேயுண்ண வாடா! (இந்த)

(3) நித்தியாநந்த! நிர்மலசுந்தர! பத்தியமான
ஸத்தியவுண்மையைக் கீதையாப்போதிக்கவாடாமகனே, யோடிவாடா! (இந்த)

(4) பத்தியதென்ன! சத்தியதென்ன பழங்கனிபோலுளங் கனிந்துளாருள்ளத்தே
முக்திக்குவித்தாய்மும்மதக்களிறுய்ச்சச்சிதாநந்தவெண்ணெய்தயிர்பாலுண்ணவாடா
[மகனேயோடிவாடா! (இந்த)

(5) வாய்மதம்பேசி வீண்தர்க்கஞ்செய்யும் வாயால்வல்லவ ருள்ளத்தேயொளித்துத்
தாய்மனம்போலுளந் தண்ணுயுருகுவர் கண்ணேவிளையாடுமகனே யோடிவாடா! ()

(6) தன்னைமறந்துன்னைத் தன்னுள்ளேவைத்த கோபிகளைக்கூடியாடி
தன்னயவிஷந்தலைக் கேறியகாளிங்கன்றலையைநசுக்கிய தற்பரனேயோடிவாடா! (இந்)

(7) என்னைமறந்துன்னை யென்னுள்ளேவைத்து ஏங்கித்தவிக்கநானிங்கே
அன்னையைமறந்துன்னுயர்பாடியில் ஆடிக்குதிக்கிற மகனேயோடிவாடா! (இந்த)

(8) பொன்னைப்பணியைப்பூணாரந்தன்னைப் புவியிற்கருதிலேன் கண்டாய்!
அன்னையாவுன்னைப்பெற்றதோர்பாக்யம் பாரினிற்றந்தவென் மகனேயோடிவாடா! ()

(9) தன்னயவிஷந்தலைக் கேறியகாளிங்கன்றலையைமிதித்துத் தாங்தோம்எனக்கூத்தாட
அன்னவன்கக்கியவிஷத்தாலருமேனி கருமேனியானவென் மகனேயோடிவாடா! ()

(10) பரவெளியுனைப்பெற்றுஞ் சிறைவெளியிருந்துநான் சிறுமைப்பட்டலறுவேனோ!
குறைவெளியெல்லாநிறைவெளியாக்கிற மாணிக்கக்குன்றேமரகதமேயோடிவாடா!

(11) மாணிக்கக்குன்றே மரகதவொளியே
மனத்தேரோட்டிக்குணத்த்வனிசெய்யப் பிறந்ததோர்சேயே!
ஆணிப்பொன்னம்பலத்தாடியகூத்தைச்
சேடிப்பெண்கோபியரிடை மருங்கேயாடு, மகனே! யோடிவாடா! (இந்த)

(12) உள்ளந்துடிக்கவேயுன்னெண்ணந்தடிக்கக்
கள்ளமனதுங் கருகியுருகவே
எள்ளுக்குள்ளெண்ணெய்போலென்னுள்ளிருந்துநீ
ஏகாங்கியாயென்னைத்தவிக்கவேகாண்கிற மகனேயோடிவாடா! (இந்த)

(13) கள்ளமனதுங்கரைந்தேபோயிற் றுள்ளமுமுருகியே தண்ணுயுறைந்தது
கள்ளத்தனமாயுருக் காட்டியொளிக்கிறமகனேயோடி, வாடா! முத்தந்தாடா! (இந்த)

(14) பள்ளமுள்ளவிடந்தனில் நீர்தங்குமென்பர்! பாரில்நான்படுதுயர்காணுய்!
கள்ளமுள்ளமனம்விட்டுஉள்ளமுள்ளவிடங்கொள்ளு,மகனேஓடிவாடா!முத்தந்தாடா.

(15) உள்ளமுள்ளஉள்ளம்விண்டு
கள்ளமனங்கள்ளதுண்டு கட்குடித்தமன மொழிவிலோடேக்கமுண்டு
உள்ளமனமுள்ளவுள்ள
ஒழிவிலுள்ளமனமொழிய மகனேயோடி வாடாமுத்தந்தாடா! (இந்த)

(16) வாடா!!! முத்தந்தாடா!!
வழிதேடாவழியுனைநாடினேனுன்
வாடாமுத்தந்தாடாவென்கவிதிரவுன்
திருமேனியைக்கட்டிநான்முத்தமிடவாடா! மகனேயோடிவாடா!

இந்தலூட்டி செய்யலாமோ யசோதைபாலா!
இந்தலூட்டி செய்பலாமோ சோதையுடைய பாலாஅ உம்.

---

# The Study of Comparative Religions.

## A Text Book by Sri Vidyaranya.



"ஸர்வதரிசனசங்கிரகம்."

"எம்மதமும் சம்மதமே"—குருவாக்கு.

இது ஸ்ரீ சங்கரபீடத்தாசிரியராயெழுந்தருளியிருந்த ஸ்ரீ வித்யாரண்யஸ்வாமிகள் திருவாய் மலர்ந்தருளிய அருமையான கிரந்தம். வடமொழியிலுள்ளதை, தமிழ்ப்படுத்திச்சீர்படத்திருத்திப் புத்தகரூபமாயச்சிட்ட ம-ா-ா-ஸ்ரீ சென்னை, ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல்,தமிழ்ப்பண்டிதர் கோ. வடிவேலு செட்டியார், ம. ஷண்முக முதலியா ரவர்களுக்குத் தமிழுலகம் கடமைப்பட்டிருக்கிறது. இவர்கள் எடுத்துக்கொண்ட ஊக்கத்துக்கு உதவியாயிருந்து ஸம்ஸ்கிருதகிரந்தத்தைத் தமிழில் வசனவடிவாக இயற்றிக்கொடுத்த விஷ்ணுபுரம் ப்ரஹ்மஸ்ரீ இராமச்சந்திர சாஸ்திரியாரவர்கள் செய்த வித்வத் சகாயத்திற்குக் கைம்மாறில்லை.

இக்கிரந்தம் "ஸர்வதரிசன சங்கிரகம்" எனப் பேருற்றும் இதிலுள்ள தரிசனங்கள் பதினாறே. பதினாறே ஸர்வமுமென்றால் எப்படியாகும்? என்று கேட்கலாம். கிரந்தங்கள் கோடானுகோடி யானாலும் அவைகளுக் கெல்லாம் உயிர்கொடுத்து உச்சாரண லக்ஷணமாகவுள்ளது பதினாறு உயிரெழுத்துக்களே. இப்பதினாறு உயிரெழுத்துக்களையும் அததன்கலை விளங்க 'ஷோடச கலா தரிசனம்" என்று சொல்லும் அஹக்கண்பார்வை (தரிசனம்) உண்டானால், மற்றக் கிரந்தங்களின் கருத்துக்களை யெல்லாம் இப் பதினாறு எழுத்துக்களின் ஸ்வரத்தி லடைத்து "இலக்கியம்கண்டதற்கு இலக்கணம் கூறி" முடித்துவிடலாம்.

இவ்வுயிரெழுத்துக்கள் பதினாறும் தனித்தும், முப்பத்தியைந்து மெய்யெழுத்துக்களை யுடலாகக் கொண்டும், "உடல்மேல் உயிர்வந்தொன்றுவ தியல்பே" என்னும் இலக்கண சூத்திரப்படி இயல்பாய் ஒலிப்பதனால், வர்ணங்கள் என்று சொல்லப்படும். இந்த 51 எழுத்துக்களும் அவற்றின் விகாரங்களுமே எல்லாக்கிரந்தங்களுமாகவிரிந்தது. அந்தக்கிரந்தங்களிலிருந்து ஸர்வசமயங்களும் சாஸ்திரங்களும் உண்டாயின.

மேற்றிசையிலுள்ள பூதபௌதிக சாஸ்திர வித்பன்னர்கள், தற்காலம், (Radium) 'ரேடியம்' என்று சொல்லப்பட்ட ஸ்வப்பிரகாச "சோதி மருந்து" ஒன்றைக் கண்டுபிடித்து அதன் பிரகாசசக்தியை ஆய்ந்து வருவதில், இதுகாறும் அவர்கள் அறிவுக்கெட்டாததாயிருந்த அனேகம் ஜோதிவர்ணங்கள் இருக்கின்றன வென்பதைக்கண்டு அதிசயித்து ஆச்சரியமுற்று மேன்மேலும் அந்த ஜோதியை ஆராய்ச்சி செய்து வருகிறார்கள். பிரகிருதி கேவலம் ஜடபதார்த்தமே யென்று நம்பியிருந்த அவர்கள், இப்பொழுது தாங்கள் இதுவரையில் சுத்த ஜடபதார்த்தமென்று நம்பியிருந்த வஸ்துக்களில் ஸ்வப்பிரகாசமான சக்தியொன்றிருக்கிறதென்று கண்டுதேர்ந்திருக்கிறார்கள். இந்த ஸ்வப்பிரகாசகலைகளை (Alpha Rays, Beta Rays etc) A கலை B கலை யென்று கிரேக்க பாஷையின் அக்ஷரங்களைக்கொண்டு வரிசைக்ரமமாகப் பேரிட்டு அவைகளின் வர்ணபேத விசேஷங்களை ஆராய்ந்து தேர்ந்து வருகிறார்கள்.

மந்திர திருஷ்டாக்களான நம்முடைய ருஷிகளால் தேவ பாஷையென்று வழங்கும் ஸம்ஸ்கிருதத்தின் ஒவ்வொரு அக்ஷரத்தின் வர்ணத்தையும் ஆராய்ந்து அவைகளெல்லாம் பிரணவ ஸ்வரூபமாம் "ஏகாக்ஷர"த்தி லிருந்து திரியாக்ஷரீரூபமாய் வெளிப்பட்டு (வியக்தமாகி) ப் பிராணசக்தி யென்று சொல்லும் பஞ்சசங்கியையால் விளங்கும் "பஞ்சாக்ஷர" மூலமாய் "அஷ்டாக்ஷரம்" அல்லது "அஷ்டபீஜாத்மகமாய்" விளங்கும் புருஷ ரூபமாயும், "ஷடாக்ஷரீ" யென்று சொல்லும் ஷட்பீஜாத்மகமான ஸ்திரீ அல்லது பிரகிருதியென்னும் சக்தி ரூபமாயும், இந்த புருஷப்பிரகிருதி ரூபங்களின் கூட்டுறவால் சதுர்த்தச(14)கலாரூப உத்தம ஜீவசக்தி யுண்டாகிறதென்றும், நவாத்மகபாவமாய் "நவாக்ஷரி" யென்னும் பேரால் விளங்கும், பிரணவத்துக் கபின்னமான ஏகரூப மஹாசக்தி, ஜகத்துக்கெல்லாம் ஆதிகாரணமாய் விளங்குகிறதென்றும் பிரத்தியக்ஷ சாக்ஷாத்காரமாகத் தரிசனமுகத்தால் அறிந்து நிச்சயித்திருக்கிறார்கள். நிச்சயித்திருப்பதன்றி குருசிஷ்ய பரம்பரையாகச் சிஷ்யர்களுக் கோதிப் பிரத்தியக்ஷ சாக்ஷாத்காரமுண்டாகவும் செய்திருக்கிறார்கள்.

இக்கிரந்த மியற்றிய வித்யாரண்யர் தாமே, பூர்வாஶ்ரமத்தில் காயத்ரீ தரிசனம் காணவிரும்பி, லோகாயத சம்பிரதாயமாய் பிராஹ்மணர்களை வரவழைத்துப் பொருளுதவிசெய்து லக்ஷம் லக்ஷமாக காயத்ரி மந்திரத்தை யுருஜபித்துத் தமக்கு தத்தம் செய்யச்சொல்லியும், காயத்ரீ தரிசனம் சித்திக்காமையால், காயத்ரியைக் காணும்வழி யிதுவல்லவென்று, கண்டு, கிருகஸ்தாஸ்ரமத்தைவிட்டு வித்வத்ஸந்யாசம் வாங்கிக்கொண்டு ஆரண்யத்திற் சென்று பர்ணசாலைகட்டி யதிலிருந்து காயத்ரியைக்காண வேண்டிக் கடுந்தபசியற்ற, காயத்திரிதேவி அவருக்குப் பிரசன்னமானாள். பிரசன்னமான தேவியைப்பார்த்துவிட்டு ஒன்றும் வரம்கோளாமல் அவர்சும்மாப்போக, காயத்ரியானவள் அவரைப் பின்தொடர்ந்து சென்று ஏதாயினும் ஒருவரம் கேட்கத்தான் வேண்டுமென்று நிர்ப்பந்தம் செய்ய, உபாஸ்ய சித்தரான அவர் அப்பொழுது தேசத்தார் பட்டுக்கொண்டிருந்த வறுமைப் பிணிதீரப் பொன்மாரிபொழியவேண்டுமென, அப்படியே சித்தித்ததென்று அவர்சரித்திரத்திற் காணலாம். வித்யாரண்யர் என்னும் பட்டமும் காயத்ரீதேவி கொடுத்ததேயாம்.

ஆதலால் "தரிசனம்" என்பது மஹாத்மாக்களும், மஹரிஷிகளும், மாதவர்களும், த்ருக்குதரிசிய

மாய் நேர் நேரிற்கண்ட உண்மைக்குப் பேரேயன்றி தபவியற்றிக் காணத் திறனில்லாமல், "முகத்திற் கண்கொண்டு பார்க்கின்ற மூடர்கள்" சொல்கிறபடி, வீணுணவெட்டிப் பேச்சில்லை.

ஆனல் த்ரிக்கு, தரிசன, தரிசியம் என்றுள்ள திரிபுடி ரூபமான விஞ்ஞான அறிவில், காண்பான், காட்சி யென்னும் இரண்டு அங்கங்களின் லக்ஷணப் படி, தரிசியமான காண்பொருள் என்னும் லக்ஷியம் பேதப்பட்டுத் தோன்றும். இப்பேதத்தை "யானைகண்ட குருடர்கள்" கதையில் நன்ருகவிளங்கக் காணலாம். அஃதேபோல, அகக்கண்படைத்து தீர்க்கதரிசன முண்டாகத் தபவியற்றுதற்கு ஆற்ருத ஆஸ்திக புத்தியுள்ளவர்கள், தெய்வமொன்றுள தென நம்பி விசாரம்செய்யப் புகுங்கால், மாயாசத்திகளும், சமயவாதிகளும் வேறுவேறு தம்மாயைகளையும் மதக்கொள்கைகளையும் காட்டி வற்புறுத்தி ஆஸ்திக சித்தம் பற்றிய விசாரபுருஷரைத் தத்தம் வழியிலிழுத்துச் செல்லப் பார்ப்பார்கள். இது பிராகிருத தர்மம் பற்றிச் சகஜமாய் எல்லாருக்கும் நேரக்கூடிய தாதலால், ஆத்மபுத்தி பலத்தால் தத்துவவிசாரம் செய்து மாயையைவென்ற மஹான்கள் ஜீவகாருண்யத்தினல் தாங்களடைந்த அனுபவத்தைக் கொண்டு பிறர்க்குதவியாக அவ்வச்சமயத்துண்மைபோற்படும் ஸர்வசமயக் கொள்கைகளையும், சாங்கோபங்கமாய்த் தரிசனமுறையானே தீரவிசாரித்து "எம்மதமும் சம்மதமே" என்னுமோர் ஏற்றமான ஸ்வானுபவ உண்மைபற்றி, ஒவ்வொன்றையும் உண்மைவிளங்க விசாரபுருஷர்களுக்குச் சாதகமாகச் சாதனமுறைபற்றிச் சாதித்து வைப்பர்.

இது சித்தர்களானேர் சாதகர்களுக்குச் செய்யக் கடமைப்பட்டதோர் உதவியாம்.

எம்பெருமான் ஸ்ரீமாணிக்கவாசக ஸ்வாமிகள் "போற்றித்திரு அகவலில்" "மதம்" என்னும் தலைப்பின் கீழ் சொல்லி யிருப்பது ஸ்வபாவ தர்மமாய் யாவருக்கும் பொருந்தக் கூறியதுபற்றி மனத்தில் வைக்கற்பாலதாம்.

" தெய்வம் என்பதோர் சித்தம் உண்டாகி
முனி விலாததோர் பொருளது கருதலு,
மாறுகோடி மாயா சக்திகள்,
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின;
ஆத்தம் ஆனர் அயலவர் கூடி
நாஸ்திகம் பேசி நாத் தழும்பேறினர்.
சுற்றம் என்னும் தொல்பசுக் குழாங்கள்
பற்றி யழைத்தும் பதறினர்; பெருகவும்
விரதமே பரம் ஆக வேதியருஞ்
சரதமாகவே சாத்திரங் காட்டினர்;
சமயவாதிகள் தத்தம் மதங்களே
அமைவதாக அரற்றி மலைந்தனர்.
மிண்டிய மயா வாதம் என்னுஞ்
சண்ட மாருதஞ் சுழித்தடித்தார்த்து
லோகாயதன் எனும் ஒண்டிறற் பாம்பின்
கலா பேதத்த கடுவிஷம் எய்தி,
அதிற் பெரு மாயை எனைப்பல சூழவும்,"—

என்று தம் ஸ்வானுபவத்தைச் சொல்லி யிருக்கிருர் மஹா மேதாவிகளா யிருந்தபேர்களெல்லாம் ஆஸ்திக விசாரம் செய்யப் புகுந்து இந்தப் பாடுபட்டார்களென்ருல், சுத்த சாமானியரான மற்றப்பேர்கள் ஆஸ்திக விசாரம் செய்து என்ன கடைத்தேறப் போகிருர்களென் றெண்ணி இதை வாசிப்போர் சிலர் சலிப்புறலாம். அப்படியல்ல அது; "அவனை அவன் அருளாற் கண்டால்" காணலாமே யன்றி மனிதன் தற்போதத்தால் (பேதமான தன்னறிவால்) தெய்வத்தைக் காண்பது துர்லபம். குருவருளா லன்றிப் பாதரிசனம் சித்திக்காது.

" உருவன்றி யேநின் றுருவம் புணர்க்கும்
கருவன்றி யேநின்று தான்கரு வாகும்
மருவன்றி யேநின்ற மாயப்பி ரானைக்
குருவன்றி யாவர்க்குங் கூடவொண் ணுதே."

யென்பது எம்பெருமான் திருமூலதேவர் ஓதியதோர் திருமந்திரோபதேசம். எம்பெருமான் ஸ்ரீமாணிக்க வாசகரும் இஃதையே தம் ஸ்வானுபமாகவெடுத்துச் சொல்கிருர். மதவாத மாயாவாதங்களுக்கெல்லா மாளாகித் தவித்த தம்மைக் கரையேற்றியது தமது திருடமான குருபக்தியே யென்று சொல்கிருர்.

" கொடிறும் பேதையும் கொண்டது விடாதெனும்
படியேயாகி நல்லிடை யரு அன்பிற்
பசுமரத்தாணி அறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடலென மறுகி,
..................................
" கற்ரு மனமெனக் கதறியும் பதறியும்
மற்ரேர் தெய்வங் கனவிலு நினையா
அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபரனுக அருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடி இணையைப்

பிறிவினை யறியா நிழலது போல
முன் பின்னாகி முனியா தத்திசை
என்புநைந் துருகி நெக்கு நெக்கேங்கி
அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புலன் ஒன்றி, 'நாத,' என்றரற்றி,
உரை தடுமாறி உரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதயம் மலரக்
கண்களிகூர நுண்துளி அரும்பச்
சாயா அன்பினை நாடொறும் தழைப்பவர்
தாயே ஆகி வளர்த்தனை போற்றி!
மெய்தரு வேதியன் ஆகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள், போற்றி!
ஆடக மதுரை அரசே! போற்றி!"

என்று போற்றித் திருவகவல் கூறியிருப்பதை உளங்கனிந்து உள்ளுணர்வோடு படித்து நினைத்துப் பக்தி மேலிட்டுத் தியானமு நழுவித் "தியோகாராமா" யிருந் துணர்வார்க்கும் "பேராயிரமுடைப் பெம்மான்போற்றி!" யென்றதினாலேயே அனந்த குண கலியாணரான கடவுளுடைய திருநாமம் ஒவ்வொன்றும் ஒரு தரிசனமாமென்று பெறப்படும்.

இப்படிப் பல்கோடிக் கணக்காய் விளங்கும் தரிசனங்களத்தனையையும், பதினாறு தரிசனங்களில் அடக்கி அதற்கு "ஸர்வதரிசன சங்கிரகம்" எனப் பேர்கொடுத்தது கடுகைத்துளைத்துக் கடலையடைத் தது போலும், உள்ளங்கைதனில் உவர்நீர் எழையுங் (சப்த சமுத்திரங்களையுங்)கொண்டு ஆசமநம் செய்தது போலவு மல்லவா இருக்கிற தென்று மலைக்கலாம். இந்த மலைப்புக் கிடங்கொடுக்கக் கூடாதென்றே "ஸர்வ தரிசனங்களும்" பதினாறு தரிசனங்களில் அடங்கு மென்று அக்ஷரலக்ஷியத்தை யுதாரணமாய்க்கொண்டு எடுத்துக் காட்டினோம்.

இதிலடங்கிய பதினாறு * மதங்களாவன:—

(1) சார்வாக தரிசனம் என்னும் லோகாயத மதம்; நாஸ்திகமென்றும் சொல்வதுண்டு.

(2) பௌத்ததரிசனம் எனும் புத்தி தத்துவ போத மதம்.

(3) ஆருகததரிசனம் எனும் ஜயினமதம்.

(4) இராமாநுஜ தரிசனம் அல்லது இராமாநுஜர் மதம்.

(5) பூரணப்ரஞ்ஞ தரிசனம்,அல்லது மத்துவாசாரியார்மதம்.

(6) நகுலீசபாசுபத தரிசனம், அல்லது வீர சைவம்.

(7) சைவதரிசனம்.

(8) பிரத்தியபிஞ்ஞா தரிசனம், (ஜீவேசுவர அபேத மதம்.)

(9) இரசேசுவர தரிசனம் (சித்தர் வழியென்னும் ரசவாத மந்திரஸித்தி மதம்.)

(10) வைசேஷிக தரிசனம்.

(11) நியாய தரிசனம்.

(12) ஜைமினி தரிசனம்.

(13) பாணினி தரிசனம்.

(14) சாங்கிய தரிசனம்.

(15) பதஞ்சலி தரிசனம்.

(16) சாங்கர தரிசனம்.

இவையெல்லாம் ஒவ்வொன்றும் ஒன்றுக்கொன்று பொருந்தாதபடி சமயவாதஞ் செய்வதாய்த் தோற்றினும், குடகிலே யுதித்த காவேரி நதியானது பச்சிம வாஹிநி யாகத் திரும்பி, அந்தர்முகமான யோகியின் மனம் போல், தன்னைத் தானறிந்து, பின்னர் பூர்வம்போல் வெளிப்பட்டு அகண்ட காவேரியாய்த் திரண்டோடிப் "பேரனை"யின்கண், பல்வேறு கிளைகளாகப் பிரிந்து, பஞ்சநதியாகிப் பின்னும் பிறிந்து பிறிந்து பாய்ந்து நீர்த்தம் ஒன்றே யானுலும் "தண்ணீர் நிலநலத்தால்" என்றபடி நிலபேதத்தால் பேதமேற்பட்டுக் கடைசியில் சமுத்திர சங்கமமாகும்பொழுது எல்லாம் ஒன்ருகவே அபேதமடைவது போல், பதினாறு தரிசனங்களும் சமயவாதிகளுக்கு வெவ்வேருயினும், பரதரிசனத்தில் ஒன்றேயாம்.

* "மனமொடுங்கிப் பின்னெழாத் தரிசனமொன்றே பரதரிசனமளிக்கும்" திரிபுடி ஸஹிதமான மற்ற தரிசனங்களெல்லாம் பல்வேறு சமயங்களானமதங்களேயாம். இவை ஷோடச சங்கியையில் அடங்கும்.

அஃதை வற்புறுத்த அகாரம் முதல் அநுஸ்வாரம் (அம்), விஸர்க்கம் (அஃ) ஈருகவுள்ள பதினறு அக்ஷர லக்ஷியங்களையும் "ஷோடசகலா நியாஸ" முறையாலே கீழேயெடுத்துச் "சொல்லாமற்" சுட்டி விளக்குகிறோம்:—

## (ஷோடசகலாதரிசன முறை.) *

(1) அ-அகாரத்தை † யற்றுப் பார்
அமிர்தாயை நமவென்று;
(2) ஆ-ஆகாரத்தைப் † பெருக்கிப் பார்
அநஜாயை நமவென்று;
(3) இ-இகாரத்தை † யிருந்து பார்
பூஷாயை நமவென்று;
(4) ஈ-ஈகாரத்தை † யீட்டிப் பார்
துஷ்டாயை நமவென்று;
(5) உ-உகாரத்தை † யுற்றுப் பார்
புஷ்டியை நமவென்று;
(6) ஊ-ஊகாரத்தை † யூதிப் பார்
ரதியை நமவென்று;
(7) ருகாரத்தை † ரஸித்துப் பார்
யு (த்ர) தியை நமவென்று;
(8) ரூகாரத்தை யுண்டு பார்
ஶஶிந்யே நமவென்று;
(9) லுகாரத்தைச் சிந்தையிற் பார்
சந்திரிகாயை நமவென்று;
(10) லூகாரத்தைக் கண்ணிற் பார்
காந்தியை நமவென்று;
(11) ஏ-ஏகாரத்தை யேறிப் பார்
ஜ்யாத்ஸநாயை நமவென்று;
(12) ஐ-ஐங்காரத்தை யறிந்து பார்
ஸ்ரீயை நமவென்று;
(13) ஓ-ஓங்காரத்தை யோதிப் பார்
ப்ரீதியை நமவென்று;
(14) ஔ-ஔகாரத்தை யெண்ணிப் பார்
அங்கதாயை நமவென்று;
(15) அம்-அநுஸ்வாரத்தை யடக்கிப் பார்
† பூரணையை நமவென்று;
(16) அஃ-'விஸர்க்கத்தை' விட்டுப் பார்
பூர்ணமிருதாயை நமவென்று.

---

* மிக்கமனத்தால் மிகநினைந்து சிந்திக்கில்
ஒக்கச் சிவனுருவ மாம்.:—ஔவை குறள்.

† அக்ஷரலக்ஷியங்களைப் பார்ப்பதற்குச் சாதனமாய்ச் சொல்லப்பட்ட அடைமொழியின் லக்ஷியார்த்தத்தை விளக்கும் ஆப்தவாக்கியங்கள்.

(1) அ-"அற்றது பற்றெனில் உற்றதுவீடு."
(2) ஆ-"உள்ளப் பெருக்கில் ஊனமதருகும்."
(3) இ-"சும்மா இருக்கச் சுகம்சுக மென்றோதும் மறையெல்லாம்."
(4) ஈ-"தர்மத்தை யீட்டிக் கர்மத்தை மூடி."
(5) உ-"ஊனமில் பதத்தைப் பெற்றிருந்தார் ஒழுவிலொடுக்கம் உற்றுணர்ந்தார்."
(6) ஊ-"ஊனே மறிவதென் றூதூது சங்கே உணர்வே பிரஹ்மமென் றூதூது சங்கே."
(7) ரு-"ருக்கொடு த்ரிக்குத் தரிசய மெல்லாம் ரஸம்போலொழுக வுண்ணுவர் மேலோர்."
(8) ரூ-"கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர்; கண்டதை விண்டபின் உண்டவர் மாண்டிலர்."
(9) லு-"சிந்தைய தென்னச் சிவமென்ன வேறில்லை."
(10) லூ-"விண்ணோடு விண்கலந்து விண்ணு மண்ணு மொன்ருனல்
கண்ணோடு கண்கலந்த காட்சியது பிந்துவாமே."
(11) ஏ-"நயந்துபார் வாசிகட்டி ஊசிமுனை தன்னிலேறி, பயந்துபோனல் மோசம் வரும் நாச மாவாய்,
வியந்து நின்ருல் மயக்கம் வரும் இயக்கமெத்த, கயந்துபோனு லயர்ந்து போவாய் முயன்றுபாரே."
(12) ஐ-"அறிவே வடிவென் றாதேடா காளம்
அறியாமை போனதென் றாதேடா காளம்."
"கோசங் குலைந்ததென் றாதேடா காளம்.
கூறி வானதென் றாதேடா காளம்."
(13) ஓ-ஓதியுணரும் உணர்வே யுணர் வஃதை
ஓமென் றேதியுணர்."
(14) ஔ-"எண்ணினே னெண்ணமிது வெண்ணாத [வெண்ணில்
நண்ணினேன் நாணுது நட்டு."
(15) அம்-"அலையுமனத்தை யடக்கு மவனே" யோகி,
ஞானி யெல்லாமவன்.

† "நிறைவெளிதனில் நிறைந்ததொரு பூரணத்தைக் குறைவறவே சொல்லவெனிற் சொல்லாலாமோ!"

(16) அஃ—"ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொருளெஞ்ஞான்றுங்
காதலிரு வர்க்குங் கருத்தொருமித்—தாதரவு
பட்டதே யின்பம் பரனை நினைந் திம்மூன்றும்
விட்டதே பேரின்ப வீடு."

இப்படியாக விஞ்ஞானகலைவிளங்கும் விசுத்தி சக்ரகமலத்தின் 16 இதழ்கள் வடிவமாக விளங்கும் ஸ்வராந்தமான பதினாறு அக்ஷர லக்ஷியங்களையும் தியானித்து தியேயாகாரமாகி, அவைகளின்சமஷ்டி ரூப அந்தர்க்கத அதிஷ்டான தேவதையான (பிரகாசரூபமான) ஷாகினீஸ்வரி (டாகினீசுவரி) யைத் தியானயோகத்தா லறிந்து ஷடாதார உச்சமான ஆஜ்ஞையில் பிரகிருதிதத்துவத்தை "ஹாகினீரூப தாரிணியை நமஃ" வென்று தரிசித்து, அதன்மேல் பைந்தவஸ்தானத்தில் பிந்து தரிசனஞ் செய்துகொண்டு, காலவஞ்சனஞ் செய்து உன்மனு தரிசனம் பெற்று, அதற்கும் மேலான காமகலா தரிசனம் பெற்றால் "ஸர்வதரிசன சங்கிரஹமான" ஸத்ரூப சாக்ஷாத்காரம் கிடைக்கும். அந்தப் பாதரிசனம் கிடைத்தால் "ஓம் தத் ஸத்" என்பதின் உண்மை தெரியும். அதையறிவதற்கு அனுகுணமாக சமயவிசாரம் செய்யத் தொடங்கும் விசார புருஷர்களுக்கு ஸ்ரீவித்யாரண்யர் இயற்றிய 16 - தரிசனங்கள் (மதங்கள்) அடங்கிய இந்த "ஸர்வதரிசன சங்கிரகம்" மதபேதங்க ளின்னவாறென்றும், சமயவாதிகள் தத்தம் சமயத்தை ஸ்தாபிக்கச் சொல்லும் ஆக்ஷேப சமாதானங்க ளின்னவா றென்றும் தெளிவாய்த் தெரிந்துகொள்ளப் பரமஸாதன மாகுமென்பதற் கையமில்லை. இதன் விலை ரூ. 2 - 8. இக்கிரந்தத்தின் இங்கிலீஷ் மொழிபெயர்ப்பின் விலை ரூ 7 - 14 எனத் தெரிகிறது. ஆதலின் இதன் விலை மிகவும் சாஸமேயென்பது நாம் சொல்லாமலே விளங்கும். மதவிசாரம் செய்வோர்க்கு இது இன்றியமையாத கிரந்தமாமென்பது ஸ்ரீவித்யாரண்யர் ஸ்ரீ ருங்ககிரியிலுள்ள சாரதாபீடத்தில் ஆச்சாரிய மூர்த்தமாய் எழுந்தருளி யிருந்த மஹான்களி லெல்லாம் மேலானவரென்றும், பஞ்சதசி யருளி ஸ்ரீசக்ரக் கோட்டையை ஸ்தாபித்தவரென்றும் சொல்லத் தானே விளங்கும்.

---

ஓம் ஸ்ரீசாவித்திரியை நமஃ

# உபநிஷதார்த்த தீபிகை.



## II. மண்டலப்பிராஹ்மணோபநிஷத்.

யாஞ்ய வல்கியர் என்னும் மகாமுனியானவர் ஆதித்திய லோகம் போனார். அந்த ஆதித்யனை நமஸ்கரித்து "ஓ பகவானே! ஆத்மதத்துவத்தைச் சொல்லவேண்டும்" என்றார்.

அந்த நாராயணர் (பின்வருமாறு) சொன்னார்:—

ஞானத்துடன் சேர்ந்த இயமம் முதலான எட்டு அங்கங்களுடன் கூடிய யோகம் சொல்லப்படும்.

குளிர், உஷ்ணம், உணவு, தூக்க மென்னுமிவற்றின் ஜயம், எப்பொழுதும் சாந்தி, நிச்சலத்தன்மை, விஷயங்களிற் செல்லாமல் இந்திரியங்களைக் கட்டுப்படுத்த லென்னு மிவை இயமங்களாம்.

குருபக்தி, தத்துவமார்க்கத்தில் பிரியம், சிரமமின்றி அடையப்பட்ட பொருள்களின் அனுபவம், அவ்வநுபவத்தால் சந்தோஷம், சங்கமின்மை, ஏகாந்தவாசத்தால் மனோநிவிர்த்தி, பலத்தில் ஆசையின்மை, வைராக்யபாவ மென்னுமிவை நியமங்களாம்.

சுகமாக ஆசநத்தில் இருப்பதும் அப்படி வெகுகால மிருத்தலும் ஆசனத்தின் லக்ஷணமாம்.

பதினறு, அறுபத்து நான்கு, முப்பத்திரண் டென்னும் இந்தக் கணக்கின்படி பூரக கும்பக ரேசகங்கள் பிராணயாமமாம்.

விஷயங்களினின்றும் இந்திரியங்களினின்றும் அவற்றின் பொருள்களினின்றும் மன தைத்தடுத்தல் பிரத்தியாகாரமாம்.

விஷயங்களினின்றும் திருப்பியபிறகு மனதைச் சைதன்யத்தின்கண் ஸ்திரப்படுத்து தல் தாரணையாம்.

சர்வசரீரங்களிலும் சைதன்யத்தை ஏகமாய்ப்பார்த்தல் தியானமாம்.
அத்தியானத்தின் விஸ்மிருதி (தியானத்தின் வாசனையை விடுதல்) சமாதியாம்.
இவை சூக்ஷ்மாங்கங்கள். இப்படி அறிகிறவன் மோக்ஷமனுபவிப்போனுவன்.

(முதற் பிராஹ்மணம் - முதல் அத்தியாயம் முற்றிற்று).



காமம், குரோதம், பயம் நிச்வாசம் (பெரு மூச்செறிதல்) நித்திரை என ஐந்து தோஷங்கள் தேகத்திற்கு உண்டு. அவைகளைப்போக்க நிஸ்ஸங்கல்பம், க்ஷமை (பொறுமை), குறைந்தவுணவு, (ஆன்மநாட்டத்தில்) தவறுதலின்மை, தத்துவசேவனம் (சொரூபத்தில் ஏகாக்கிரதை அடைதல்) இவை (காரணமாம்).

நித்திரையென்னும் பாம்பும், ஹிம்ஸை (துக்கம்) என்னும் அலைகளும், ஆசையென்னும் சுழலும், மனையாள் என்னும் சேறும், (இவைகளால் நிறைந்த) சம்சாரமாகிய கடலைக்கடக்கச் சூக்ஷ்மமார்க்கத்தை (விருத்தி எழும் இடத்தை)ப் பிடித்துச் சத்துவம் முதலிய குணங்களைக்கடந்து ¡ தாரகத்தைப் பார்க்கவேண்டும். புருவமத்தியில் பிரகாசக்கூட்ட ரூபமான தாரகப் பிரமம் (இருக்கிறது). அதற்கு (அதை அடைவதற்கு) உபாயம் மூன்று லக்ஷியங்களைப் பார்த்தல். (அவை வருமாறு):—

(1) (அந்தர் லக்ஷியம்): மூலாதாரத்தில் ஆரம்பித்துப் பிரம்மரந்திரம் வரையில் சுஷும்னா நாடி. சூர்யனைப்போல் பிரகாசியாநிற்கும். அதன் மத்தியில் கோடி மின்னல்களுக்குச் சமானமானதும் தாமரைத்தண்டின் நூலைப்போல் சூக்ஷ்மமுமான குண்டலினீ இருக்கும். அவ்விடத்தில் அஞ்ஞான நிவிருத்தி (உண்டாகிறது).

அதன் (குண்டலினியின்) தர்சநத்தால் சர்வபாப நிவிருத்திபா. சுட்டுவிரல்களின் நுனிகளால் மூடப்பட்ட காதின் இரண்டு துவாரங்களிலும் பூத்கார சப்தமுண்டாகும். மனம் அவ்விடத்தில் நிற்கக் கண்மத்தியிலுள்ள நீலமான ஜ்யோதியைப் பார்க்கிறன்; அவ்விதம் ஹிருதயத்திலும் பார்க்கிறன்.

(2) பஹிர் லக்ஷியமாவது: மூக்கு நுனியிலிருந்து நான்கு, ஆறு, எட்டு, பத்து, பன்னிரண்டு அங்குலங்களுக் கப்பால் வரிசையாக நீலம், சியாமளம் (கறுப்பு அல்லது கருநீலம்), சிகப்பு, வெண்மை, மஞ்சள் இந்நிறங்களோடுகூடிய வியோம தத்துவத்தை (ஆகாசதத்துவத்தை)ப் பார்க்கிறன்; அவனேயோகி. சலியாத பார்வையால் வியோம பாகத்தைப் பார்க்கும் புருஷனுக்கு அவன் பார்வைக்கு முன்னர் ஜ்யோதிக் கூட்டங்கள் உண்டாகும். அந்தப் பார்வை

ஸ்திரமாகும். சிரசுக்கு மேல் பன்னிரண் டங்குலப் பிரமாண முள்ள ஜ்யோதியைப் பார்க்கிறான். அப்பொழுது அமிர்தத்துவத்தை (சாகாத்தன்மையை) அடைகிறான்.

(3) மத்யலக்ஷியமாவது:—தனக்குள் அநேக வர்ணங்களான சூர்ய சந்திர அக்கிச் சுவாலைகளைப் போலும், இவைகளெல்லாமற்ற ஆகாசத்தைப்போலும் பார்க்கிறான். அதன் ரூப மாகிறான்.

அப்பியாசத்தால் நிர்விகாரமானதும் குணமற்றதுமான ஆகாசமாகிறான்; பிரகாசிக்கும் நக்ஷத்திரத்தோடுகூடிய மகாந்தகாரத்திற்குச் சமானமான பிரகாசமாகிறான்; பிரளயகாலத்து அக்கினியைப்போல் பிரகாசிக்கும் மஹாகாகாசமாகிறான். சர்வத்திற்கும் மேன்மையான பரமப்பிர காசத்தோடு பிரகாசிக்கும் தத்துவாகாசமாகிறான்; கோடிசூர்யப் பிரகாசமுள்ள சூர்யாகாசமாகி றான். இவ்விதம் அப்பியாசத்தால் அதனதன்மயமாகிறான்.

(முதற் பிராஹ்மணம் - இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று).



I - வது பிராஹ்மணம் (3 - வது அத்தியாயம்).

அந்தயோகம் பூர்வம் அபரமென இருவகையென்றறி. பூர்வத்தைத் தாரகயோகமென் றும், அபரத்தை அமநஸ்கமென்றும் அறியவேண்டும். தாரகமும் மூர்த்திதாரகம் அமூர்த்தி தாரகமென இருவகையாகும். எது இந்திரியாந்தமோ(இந்திரியங்களைக் கடந்ததோ) அது மூர்த்தி தாரகம். எது புருவமத்தியத்துக்கு அப்பாற்பட்டதோ அது அமூர்த்திதாரகம். (மூர்த்தி தாரகம் அமூர்த்திதாரகம்) இரண்டும் மனதோடு சேர்ந்து அப்பியாசிக்கத் தக்கனவாம்.

மனத்தோடு சேர்ந்த, அந்தர் திருஷ்டி (உட்பார்வை) தாரகப் பிரகாசத்திற்குக் காரண மாகும். இருபுருவ மத்தியிலிருக்கும் துவாரத்தில் தேஜசு (பிரகாசம்) உண்டாகும். இதுபூர்வ மெனச் சொல்லப்பட்ட தாரகம்.

உத்தரம் (உத்தரபாகமான யோகம்) அமநஸ்கம். † தாலுமூலத்தின் மேல்பாகத்தில் மகா ஜ்யோதி இருக்கின்றது. அதன் தர்சனத்தால் அணிமாதிசித்திகளுண்டாகும். லக்ஷியம் உள்ளே இருக்க வெளிப்பார்வை, மூடுதல், திறத்தல் அற்றால், இது சாம்பவீ முத்திரை ஆகும். சர்வ தந்திரங்களிலும் ரகசியமாய் வைக்கவேண்டிய மகாவித்தையாகும். அதை அறிவதால் சம்சார நிவிர்த்தி யுண்டாகும். அதன் பூஜை மோக்ஷமாகிற பலத்தைக் கொடுக்கும்.

(அமநஸ்கத்தின்) அந்தர்லக்ஷியம் ஜலஜ்-ஜோதிஸ்வரூபமாகும்; ‡ மகரிஷிகளால் அறி யத்தக்கது; உள்ளிந்திரியங்களாலும் வெளியிந்திரியங்களாலும் அறியப்படாதது. சகஸ்ர கமலத்தில் ஜலஜ்யோதியே அந்தர்லக்ஷியம். புத்திபாகிற குகையில் சர்வாங்க சுந்தரனான புரு ஷனே அந்தர்லக்ஷியமென்று மற்றவர் சொல்லுவர். சிலர் சிரசுக்கள் இருக்கும் மண்டலத் தின் மத்தியில் ஐந்து முகத்தையுடையவரும் உமையோடு கூடியவரும், பிரசாந்தருமான (மிக வும் சாந்தருமான) நீலகண்டரே அந்தர்லக்ஷியமென்பர்.

† "தாலு" என்பது வாயின்மேற் பாகம்; அதன் "மூலம்" நாக்கு உற்பத்தியாகும் இடம்.

‡ இதுவே காயத்திரீ சிரசு என்று சொல்லப்படும் "ஓம் ஆபோ ஜ்யோதீரஸோ அமிருதம் பிரம்ம பூர்புவஸ்ஸுவ ரோம்" என்கிற மகாமந்திரத்தின் பொருளென்று உரையாசிரியர் சொல்லுகிறார்.

† இன்னும் சிலர் அங்குஷ்டப் பிரமாணமுள்ள புருஷனே அந்தர்லக்ஷியமென்பர் இப்படிச்சொல்லப்பட்ட விகற்பங்களெல்லாம் ஆத்மாவே. இந்த லக்ஷியத்தைச் சுத்தாத்மதிருஷ்டியால் பார்ப்பவனே பிரம்மநிஷ்டனுவான். இருபத்தைந்தாவது (தத்துவமான)ஜீவன் தன்னால் கற்பிக்கப்பட்ட இருபத்துநான்கு தத்துவங்களேயும் விட்டு இருபத்தாறுவதான பரமாத்மாவே தானென்கிற நிச்சயத்தால் ஜீவன்முக்தனுகிருன்.

‡ இவ்விதம் அந்தர்லக்ஷியத்தின் தரிசனத்தால் ஜீவன்முக்தி தசையில் தானே அந்தர்லக்ஷியமாகிப் பரமாகாச அகண்ட மண்டல மாகிருன்.

முதற் பிராஹ்மணம் முற்றிற்று.



II - வது பிராஹ்மணம். (1 - வது அத்தியாயம்).

அப்பொழுது யாஞ்யவல்கியர் ஆதித்திய மண்டல புருஷனைக் கேட்டார். ஓ பகவானே! அந்தர்லக்ஷியம் முதலியன தங்களால் அநேகவிதமாகச் சொல்லப்பட்டது. அவற்றை நான் அறியவில்லை. அவற்றை எனக்குச் சொல்லவேண்டும் என்ருர்.

அதற்கு அவர் (மண்டலபுருஷன்) சொன்னர். பஞ்சமஹா பூதங்களின் காரணமானதும் மின்னற் கூட்டத்தைப்போல் பிரகாசமானதும் சதுஷ்பீடமாம். அதன் மத்தியில் தத்துவப் பிரகாசம் (உண்மையின்பிரகாசம்) உண்டாகும்; அது அதிரகசிய மானது, அவ்யக்தமானது (வெளிப்படை யல்லாதது). அது ஞானமெனப்படும் ஓடத்தில் ஏறினவனுலேதான் அறியப்படும். அது பாஹ்யாந்தர § லக்ஷியமானது. அதன் மத்தியில் ஜகத் (உலகம்) லயமாயிருக்கும். அது நாதம், பிந்து, கலை இவைகளுக்கு அதீதமான (அப்பாற்பட்ட) அகண்ட (பிரிவினையற்ற) மண்டலம். அது சகுண நிர்க்குணஸ்வரூபம். அதை அறிந்தவன் முக்தன்.

ஆதியில், அக்நிமண்டலம், அதன்மேல் சூர்யமண்டலம். இவற்றின் (இவ்விரண்டின்) மத்தியில் சதா (அமிருத) சந்திரமண்டலம். அதன் மத்தியில் அகண்ட பிரம்ம தேஜோமண்டலம். அது (அகண்ட பிரம தேஜோமண்டலம்) மின்னலைப்போல் வெண்மையான ஒளியுள்ளது. அதுவே சாம்பவியின் லக்ஷணம்.

---

† இத்தலக்ஷணம் கடவல்லி யுபநிஷத்திலும் தைத்திரீய உபநிஷத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

‡ இவ்விடத்தில் சாங்கியமதத்தை ஒருவாருக அநுசரித்து தத்துவங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. சாங்கியமதப்படி தத்துவங்கள் 25. அவை வருமாறு:—

(1) பிரகிருதி, (2) புத்தி, (3) அகங்காரம், (4 - 8) தந்மாத்திரைகள் ஐந்து, (9 - 13) ஞானேந்திரியங்கள் ஐந்து, (14 - 18) கர்மேந்திரியங்கள் ஐந்து, (19) மனம், (20 - 24) ஸ்தூல பூதங்கள் ஐந்து, (25) புருஷன் அல்லது ஆத்மா.

கபிலரிஷி சித்தாந்தமாகிய நிரீசுவரசாங்கியமதத்தில் பரமாத்மாவை ஒப்புக்கொள்கிறதில்லை. அவர் மதப்படி புருஷன்தன்னைப் பிரகிருதியைவிட வேருகவும்அதனுடன் சம்பந்தமில்லாதவனுகவும் பார்ப்பதே முக்தி. ஸ-ஈசுவர சாங்கியமெனப்படும் பாதஞ்சல யோகதர்சநப்படி 26-வது தத்துவமான ஈசுவரன் உண்டு. ஆனல் அதன்படி பிரகிருதி-புருஷ விவேகத்தை உண்டுபண்ண ஈசுவரத்தியானமும் பலவழிகளில் ஒன்ருக சொல்லப்படுகிறதே யல்லாமல், ஈசுவர-ஆத்ம ஐக்கியம் ஒப்புக்கொள்ளப்படவில்லை.

§ பாஹ்யம் (வெளி); ஆந்தரம் (உள்). இவ் விருவிதப் பார்வைக்கும் மத்தியகதமான „ லக்ஷியமானது (ஜகத்லயதிருஷ்டி) என்று உரையாசிரியர் பொருட்படுத்துகிருர்.

அதன் (அச்சாம்பவியின்) தர்சநத்தில் மூன்றுவித திருஷ்டிகள் (பார்வைகள்) உண்டு. அவை அமா, பிரதிபத் †, பூர்ணிமா எனப்படும். (கண்) பார்வை முழுதும் மூடப்பட்டது அமாதிருஷ்டி. பாதிதிறந்தது பிரதிபத் (திருஷ்டி). முழுதும் திறந்தது பூர்ணிமா (திருஷ்டி). இவற்றுள் பூர்ணிமா அப்பியாசமே செய்யத்தக்கது.

அதன் லக்ஷியம் நாஸாக்கிரம் (மூக்கு நுனி). அப்பொழுது (லக்ஷியத்தைப் பார்க்கும் போது) மிகுந்த இருள் தோற்றும். அதன் அப்பியாசத்தால் அகண்ட மண்டலாகாரமான ஜ்யோதி காணப்படும்; அதுவே சச்சிதானந்தப் பிரஹ்மம் ஆகும். இவ்விதம் மனம் எப்பொழுது சஹஜானந்தத்தில் லயமாகின்றதோ அப்பொழுதே சாம்பவி முத்திரை யாகும். அதையே (அந்த முத்திரையையே) கேசரீ என்றும் சொல்லுவார்கள். அதன் அப்பியாசத்தால் மனத்திற்கு ஸ்திரத்தன்மை யுண்டாகும், அதனால் வாயு ஸ்திரமாகும். ‡

அதன் அடையாளங்களாவன. ஆரம்பத்தில் நக்ஷத்திரத்தைப் போல் தோற்றும். பிறகு வயிரக் கண்ணுடிபோலும், அதன் பிறகு பரிபூர்ணமான சந்திரமண்டலம் போலும், அதன் பிறகு நவரத்தினப் பிரகாசமுள்ள மண்டலம்போலும், அதன்பிறகு மத்தியான்ன சூர்யமண்டலம் போலும், அதன்பிறகு அக்நி சிகா (நெருப்பின் ஜ்வாலை) மண்டலம்போலும் வரிசையாகக் காணப்படும்.

அப்பொழுது பஸ்சிமாபிமுகமான (பின்நோக்கிய) பிரகாச முண்டாம். ஸ்படிகம், புகை, பிந்து, நாதம், கலை, நக்ஷத்திரம், மின்மினி, தீபம், பொன், நவரத்தினங்கள் இவை முதலான பிரகாசங்கள் தோன்றும். அப்பொழுதுதான் பிரணவ ஸ்வரூபம் (அறியப்படும்).

(இரண்டாவது பிராஹ்மணம் - முதல் அத்தியாயம் முற்றிற்று).



### II - வது பிராஹ்மணம் (2 - வது அத்தியம்).

பிராணன் அபானன் இரண்டையும் ஐக்கியம் செய்து கும்பகத்தில் திருடமானவனும் நாசிகாக்கிரத்தின் (மூக்குநுனியின்) பார்வையில் திருடமாகிய பார்வை யுள்ளவனும் இரண்டு கைகளின் விரல்களால் ஷண்முகீகரணம் § செய்து பிரணவத் துவனியைக் கேட்டு மனம் அவிடத்தில் லயமாகிறது. அப்படிப்பட்டவனுக்குக் கர்மம் ஒட்டாது. சூர்யனுடைய உதயம் அஸ்தமன (கால)ங்களி லன்றோ கர்மம் செய்யவேண்டும். இவ்விதம் தெரிந்தவனுக்கு ஞான சூர்யனின் உதயா ஸ்தமனம் இல்லாததால் அவனுக்குச் சகல கர்மங்களும் கிடையாது. சப்தமும் காலமும் லயமான காரணத்தால் இராப்பகல் கடந்தவனுகிச் சர்வ பரிபூரணஞானத்தால் உன்மனியவஸ்தையின் வசத்தால் பிரமத்தில் ஐக்கியம் ஆகிறான். உன்மனியால் அமநஸ்கம் உண்டாகிறது. இவ்விதம் அறிகிறவனுக்கு சிந்தனையற்றிருப்பதே தியாநம். சர்வ கர்மங்களைப் போக்குதலே ஆவாஹனம், நிச்சய ஞானமே ஆசனம், உன்மனீபாவமே பாத்தியம், எப்பொழுதும் அமநஸ்கமே அர்க்கியம், சதா பிரகாசமே ஆசமநம், அளவிடக்கூடாத அமிருத விருத்தியே ஸ்நாநம். சர்வத்திலும் ஆத்ம பாவனையே (சர்வமும் ஆத்மா என்கிற பாவனையே) கந்தம், திருக்(பார்

† 'பிரதபத்' என்று பிரதிமை திதிக்குப்பேர்.

‡ மனேலய மாகவே பிராணவாயுவின் லயம் தானே ஆகுமென்று உரையாசிரியர் சொல்லுகிறார்.

§ இரண்டு கைகளினுடைய ஆறு விரல்களால் காது துவாரம் இரண்டு, மூக்கு துவாரம் இரண்டு, கண்கள் இரண்டு இவ்வாறையும் மூடுதல்.

ப்பவன்) ஸ்வரூபத்தில் ஸ்திரப்படுதலே அக்ஷதைகள், † சித்தை (ஞானத்தை) அடைவதே புஷ்பம், சித்தாகிற (ஞானமாகிற) அக்நிஸ்வரூபமே தூபம், சித்தாகிற (ஞானமாகிய) சூர்யஸ்வரூபமே ‡ தீபம், பரிபூர்ணமான சந்திரனுடைய அமிருதத்தோடு ஒன்று படுதலே நைவேத்யம், நிச்சலத்தன்மையே பிரதக்ஷிணம், ஸோஹம் $ பாவமே நமஸ்காரம், மௌனமே ¶ ஸ்தோத்திரம், சர்வசந்தோஷமே விசர்ஜனம் (பூசையின் முடிவு) †† ஆகும்.

(இரண்டாவது பிராஹ்மணம் - இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று).



II - வது பிராஹ்மணம் (3 - வது அத்தியாயம்).

இவ்விதம் திரிபுடி நீங்க, அலையற்ற சமுத்திரம்போலும், காற்று இல்லாதவிடத்துத் தீபம் போலவும், சலநமற்றதும் சம்பூர்ணமானதும் ‡‡ பாவ அபாவங்கள் அற்றதுமான கைவல்ய ஜ்யோதியாகிறான்,

சாக்கிரம் (விழித்திருக்கும் நிலை) தூக்கம் இவைகளின் முடிவை யறிந்ததால் பிரஹ்மவித்தாகிறான் (பிரஹ்மத்தை அறிந்தவனாகிறான்).

சுழுத்திக்கும் சமாதிக்கும் மனோலயம் பொதுவாக இருந்தபோதிலும், சுழுத்தியில் (மனம்) அஞ்ஞானத்தில் லயப்பட்டிருப்பதாலும், அது மோக்ஷத்துக்குக் காரணமாகாதபடியாலும் இரண்டுக்கும் பெரிய வித்தியாசமுண்டு. சமாதியிலோ அஞ்ஞானமும் அதன் விகாரங்களும் நீங்கிய மனம் அகண்டாகாரவிருத்தியாம் சாக்ஷிசைதன்யாகாரமாகப் பெற்று பிரபஞ்சத்தின் லயமுண்டாகும். ஏனென்றால் பிரபஞ்சம் மனதினால் $$ கற்பிக்கப்பட்டதால் அவ்விரண்டிற்கும் பேதமில்லை. ஒருவேளை மனம் வெளிப்பட்டாலும் (அப்பொழுது அவ்வெளித்தோற்றங்கள்) மித்யை (அசத்யம்) என்கிற பாவனையால் (பிரபஞ்சலயமுண்டாகும்).

---

† பார்ப்பவன், பார்வை, பார்க்கப்படும் பொருள் எனமூன்று பகுதிகளாயுள்ளது விஷயஞானம்; அல்லது அபரஞானமாகும். இதுவே திரிபுடிஞானமெனச் சொல்லப்படும். பார்வையும் பார்க்கப்படும் பொருளும் பார்ப்பவன் மாத்திரமாய் நிற்றலே திருபுடியற்ற பரஞானமாகும்.

‡ இவ்விதம் அக்நி, சூர்ய, சந்திர மண்டலங்களாகிய மும்மண்டலங்களும் சொல்லப்பட்டன.

$ "ஸோஹம் பாவம்" அவனே நான் என்னும் பாவனை, அல்லது ஸ்நிதி; இதுவே அஜபா காயத்திரி அற்ற சுத்த மந்திரத்தின் உண்மை.

¶ இவ்விடம் மௌனம் என்பது வாக்கின் மௌனமன்று, மனதின் விருத்திகளடங்கின பரமசூன்யமான மனோமௌனமுமன்று, பரம்பொருளே தான் என்றும், பிரம்மாநந்தத்தை அனுபவிக்கிறோம் என்கிற தோற்றமுமற்ற மகாமௌனமாகிய ஆநந்தாதீத நிலையே என்று பொருள் கொள்ளவேண்டும்.

†† இவ்வாறு ஜீவன்முத்தர்களின் நிலை பூஜையாக உருவகப்படுத்திச் சொல்லப்பட்டது.

‡‡ பாவ அபாவங்கள் என்பன நினைவு நினைவின்மை யாகிய சகல, கேவலங்களைக் குறிக்கும்.

$$ காரணமும் காரியமும் அபேதம் என்கிற நியாயப்படிச் சொல்லப்பட்டிருக்கிறது. சுழுத்தியில் பரிச்சின்னமான மனம் அஞ்ஞானத்தில் லயப்படும் என்றும், சமாதியில் அம்மனமே அஞ்ஞானத்திலிருந்தும் நீங்கி அபரிச்சின்னமாகும்(திரிபுடியற்றதாகு மென்றும்)உரையாசிரியர் சொல்லுகிறார்.

எப்பொழுதும் பிரகாசிக்கும் சதாநந்தானுபவ மொன்றிலேயே இருக்கும் பிரஹ்மவித்தானவன் அதுவே (அப்பிரஹ்மமே) யாகிவிடுகிறான். †

எவனுக்குச் சங்கல்பநாசம் உண்டாயிற்றோ அவனுக்கு முக்தி கையிலிருக்கும்; ஆகையால் பாவ அபாவங்களைத் தள்ளிப் பரமாத்மதியானத்தால் முக்தனாகிறான். மறுபடியும் மறுபடியும் சகல அவஸ்தைகளிலும். ஞானம் ஞேயம் (அறியப்படும்பொருள்), தியானம், தியேயம் (தியானிக்கப்படும்பொருள்) லக்ஷியம் அலக்ஷியம் (லக்ஷியமல்லாதது), திருசியம் (பார்க்கப்படும் பொருள்), அதிருசியம், வேண்டுவன வேண்டாதன என்னும் இவைகளைத்தள்ளிஜீவன்முக்தனாகிறான்.

(இரண்டாவது பிராஹ்மணம் - மூன்றாவது அத்தியாயம் முற்றிற்று).



II - வது பிராஹ்மணம் (4 - வது அத்தியாயம்).

அவஸ்தைகள் ஜாக்கிரம், சுவப்நம், சுழுத்தி, துரீயம், துரீயாதீதமென ஐந்து.

ஜாக்கிரத்தில் ஜீவன் பிரவிருத்தி மார்க்கத்தில் ஆசையுள்ளவனைப் பிரவர்த்திக்கிறான்; பாபங்களின் பலமாகிய நரகமுதலியவை தனக்கு வேண்டாம், நற்கர்மங்களின் பலமாகிய சுவர்க்கமே தனக்கு வேண்டுமென்று இச்சிக்கிறான். அவனே வைராக்கியம் பூண்டு கர்மத்தாலுண்டாகிய ஜன்மங்கள் போதும் சம்சாரமாகிய பந்தம் போதும் என்று முக்தியில் ஆசையுள்ளவனாய் நிவிர்த்தி மார்க்கத்திற் பிரவேசிக்கிறான்.

அவனே (அந்தஜீவனே) சம்சாரத்தைக்கடக்க வேண்டிக் குருவை ஆசிரயத்துக் காமம் முதலியவைகளை விட்டு விதிக்கப்பட்ட கர்மங்களை (மாத்திரம்) செய்துகொண்டு, சாதனங்கள் நான்குடன் கூடினவனாய் ஹிருதய கமலமத்தியில் ‡ சத்தாமாத்திரமான பகவானை அந்தர்லக்ஷியரூபமாய் அடைந்து சுழுத்தியவஸ்தையிலும் முன்சொன்ன பிரஹ்மானந்த ஸ்மிருதி (ஞாபக, ஞாப்தி)யை § அடைந்து, நான் ஏகனே அத்விதீயனென்று (இரண்டற்றவனென்று அறிந்து) கொஞ்சகாலம் அஞ்ஞானத்தின் விருத்தியால் (ஸ்வரூபத்தை) மறந்தும், ஜாக்கிராவஸ்தையில் உண்டானவாசனைகளால் நான் தைஜஸ ¶ னென்றும், இருவாசனையும் (சாக்கிரசொப்னம் இரண்டின்வாசனையும்) விட்டு இப்பொழுது நான் பிராஞ்ஞனென்றும் (நினைந்து) ஸ்தானபேதத்திலும் நான் ஒருவனே, அவஸ்தைபேதங்களுக்கு அப்பாற்பட்டவன், என்னைத்தவிர வேறு இல்லையென்று விவேகம் பிறந்தவனாகி, சுத்தாத்வைதமான பிரஹ்மம் நானே என்று பேதவாசனைக

† அனுபவம் முதல் உண்டான பொழுது பிரஹ்மம் தானென அறிகிறவன் பிரஹ்மவித், அதாவது பிரஹ்மத்தை யளிக்கிறவன்; பிறகு பிரம்மவரன், வரியான் என்னும் நிலைகளையும் கடந்து ஆநந்தாதீத நிலையிலிருப் பவனே பிரம்மமேயானவன்.

‡ இதன்பொருள் ஞானவாசிட்டம் உத்தாலகன் கதையில் சத்தாசாமானியம் சித்சாமான்யம் என்று சொல்வதில் பார்க்கலாம்.

§ இதையே ஸ்ரீக்ருஷ்ணபகவான் கீதையில் ஞானியானவன் எவரும் தூங்கும்போது விழித்திருப்பான் என்று சொன்னது. இதையே நனவிற்சுழுத்தியென்றும் சொல்வதுண்டு.

¶ அஞ்ஞானத்தால் சாக்கிராவஸ்தையில் விசுவனென்றும், சுவப்நாவஸ்தையில் தைஜசனென்றும் சுழுத்தியவஸ்தையில் பிராஞ்ஞனென்றும் ஒரே ஜீவன் அந்தந்த அவஸ்தைகளில் நினைக்கிறான். இதன் விஸ்தாரத்தைப் பிரணவோபாஸனையைக் கூறும் மாண்டூக்கிய உபநிஷத்தில் பார்க்கலாம்.

ளைப்போக்கி,தன்னுள்ளத்தில் உதிக்கும் சூர்யமண்டலதியானத்தால் ததாகாரமாகி பரப்பிரஹ்மமாகிய மோக்ஷமார்க்கத்தைப் பிடித்தவனைப் பரிபக்குவனாகிறான். சங்கல்பம் முதலியவைகளுடன் கூடியமனம் பந்தத்துக்குக் காரணமாகும். அவைகளினின்றும் விடுபட்டமனம் மோக்ஷத்துக்குக் காரணமாகும். அவ்விதமானவன் கண் முதலிய வெளிப்பிரபஞ்சத்தில் உபரதி (விடுதலை) யடைந்தவனாகி, பிரபஞ்சவாசனைகளையும் விட்டு, சகலஜகத்தையும் ஆத்மஸ்வரூபமாகப் பார்க்கிறவனாய் அகங்காரத்தைவிட்டு, பிரஹ்மம் நான் என்று சிந்தித்துக்கொண்டு, இவ்வெல்லாம் (சகல ஜகமும்) அந்த ஆத்மாவே என்று பாவித்துக் கிருதகிருத்தியனாகிறான்.

(இரண்டாவது பிராஹ்மணம்-நான்காவது அத்தியாயம் முற்றிற்று).



சர்வபரிபூரண துரீயாதீதப் பிரஹ்மமாகிவிட்ட யோகியாகிறான். அவனையே பிரஹ்மமென்று துதிப்பர். சர்வலோகங்களாலும் துதிக்கத்தகுந்தவனாகவும்,சகலதேசங்களிலும் சஞ்சரிக்கத் தகுந்தவனாகவு மாகிறான்.

பிந்துவை பரமாத்மாவாகிய ஆகாயத்தில் (சங்கற்பத்தை) வைத்துச் சுத்தாத்வைத † அஜாட்ய அமனஸ்க யோக நித்திரையாகிற அகண்டாநந்த பதவியில் நிற்பதால் ஜீவன்முக்தனாகிறான். அவ்வானந்த சமுத்திரத்தில் மூழ்கினவர்கள் யோகிகளாவார்கள். அவ்வானந்தத்தை உத்தேசிக்க இந்திரன் முதலியவர்களும் சுவல்ப ஆநந்தத்தையுடையவர்கள். இவ்விதம் ஆநந்தத்தை யடைந்தவன் பரம யோகியாவான்.

இரண்டாவது பிராஹ்மணம் முற்றிற்று.



## III - வது பிராஹ்மணம் (முதல் அத்தியாயம்).

யாக்ஞ்யவல்கிய மகாமுனியானவர் மண்டலபுருஷனைப் பார்த்து "ஓ ஸ்வாமி! தங்களால் சொல்லப்பட்ட அமனஸ்கத்தின் லக்ஷணத்தைமறந்துவிட்டேன். மறுபடியும் அதன் லக்ஷணத்தைச் சொல்லவேண்டும்" என்று கேட்டார்.அதற்கு மண்டலபுருஷன் அப்படியேயாகட்டுமென்று (பின்வருமாறு) சொன்னார்.

இவ்வமநஸ்கம் மிகவும் ரகசியமானது. அதை அறிவதால் (புருஷன்) கிருதார்த்தனாகிறான். அது எப்பொழுதும் சாம்பவீமுத்திரையுடன் கூடினது. பரமாத்மதிருஷ்டியினால் அதன் பிரத்தியயம்(ஸ்வரூபம்) லக்ஷியங்களைப் பார்த்து, பிறகு சர்வேசுவரனானதும்(சகலத்தையும் ஆள்வதாயும்) அப்பிரமேயமாயும் (பிரமாணங்களுக்கு எட்டாததாயும்) அநாதியாயும், சிவமாயும் (மங்களஸ்வரூபமாயும்) பிரகாசமாயும், நிராலம்பமாயும் (ஒன்றினிடத்தும் பற்றுக்கோடில்லாததாயும், அத்வயமாயும் (இரண்டற்றதாயும்) பிரம்மாவிஷ்ணுருத்திரன் முதலானவர்களுக்கும் ஒரேலக்ஷியமாயிருப்பதாயும், சர்வத்துக்கும் காரணமாயும் இருக்கும் பரப்பிரஹ்மத்தை ஆத்மாவிலேயே பார்ப்பவனாகி, (மனமாகிய) குகையில் இருக்கும் அதை (பிரஹ்மத்தை) நிச்சயமாக அறிந்து, பாவம் அபாவம் முதலிய துவந்துவங்களைக் கடந்தவனாகி, மனோன்மனி அநுபவத்தை அறிந்தவனாகி, அதன் பிறகு சகல இந்திரியங்களும் க்ஷயம் (நாசம்) அடைந்த காரணத்தால், அமநஸ்கசுகமாகிய பிரஹ்மாநந்தக் கடலினிடத்து மனதினது பிரவாஹ (ஓட்ட) ரூபமா

† ஜடத்தன்மையில்லாத நித்திரை. இதுவே அறிதுயில், அதாவது நனிவிற் சுழுத்தி ஆநந்த மென்றும்; Luminous sleep என்றும் சொல்லப்படும்.

கிய யோகத்தால், ‡ காற்று இல்லாதவிடத்துத் தீபம்போல் அசைவற்ற பரப்பிரஹ்மத்தையடைகிருன். பிறகு காய்ந்துபோன விருக்ஷத்தைப்போல், மூர்ச்சை, நித்திரை, நிச்சுவாஸ உச்சுவாஸங்கள் (கீழ்மூச்சு மேல்மூச்சுகள்) இவைகளின்மையால் துவந்துவங்கள் கழிந்தவனுகி, அசைவற்ற † காத்திரத்தை (சரீரத்தை) யுடையவனுய், பரமசாந்தியை யடைந்து, (அவன்) மனம் அலைவற்றுப் பரமாத்மாவினிடம் லயமாகிறது. பால் கறந்த பிறகு பசுவின் ஸ்தனத்தில் உள்ள பால் (எப்படி நஷ்டமாகிவிடுமோ அது) போல, சகல இந்திரியங்களும் நஷ்டமானபிறகு மனோநாசமுண்டாகும். அதுவே அமநஸ்கம்.

பிறகு நித்தியசுத்தமான பரமாத்மா நானே, "தத்துவம் அசி" (அதுவே நீ யாயிருக்கிருய்) என்கிற உபதேசத்தால் நீயே நான், நானே நீ என்று தாரகயோகமார்க்கத்தால் அகண்டானந்தம் நிறைந்தவனுகிக் கிருதார்த்தனுகிருன்.

(மூன்ருவது பிராஹ்மணம் - முதல் அத்தியாயம் முற்றிற்று).



III - வது பிராஹ்மணம் (2 - வது அத்தியாயம்).

பரிபூரணமான பரமாகாசத்தில் முழுகின மனதை உடையானுய், உன்மனீ அவஸ்தையை அடைந்து, சகல இந்திரியக்கூட்டங்களையும் விட்டு, அநேக ஜன்மங்களில் சம்பாதிக்கப்பட்ட புண்ணியக்கூட்டங்களின் பரிபக்குவத்தால் கைவல்யமாகிய பலத்தை (பிரயோஜனத்தை) அடைந்து, அகண்டாநந்தத்தால் சகலமான துக்கங்களாகிய மாசுக்களையும் நீக்கினவனுகி, பிரஹ்மமே நான் என்று கிருதகிருத்தியனுகிருன்.

பரமாத்மாபூர்ணனுனதால் நீயே நான் (நம்மிருவருக்கும்) பேதமில்லை யென்று சொல்லிச் சிஷ்யனை ஆலிங்கனம் செய்து அவனுக்கு (குருவாகிய மண்டலபுருஷனுனவர்) ஞானத்தை அனுக்ரஹித்தார்.

(மூன்ருவது பிராஹ்மணம் - இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று).

மூன்ருவது பிராஹ்மணமும் முற்றிற்று.



IV. வது பிராஹ்மணம்.

யாக்ஞ்யவல்கியர் மண்டலபுருஷனை வியோமபஞ்சகத்தின் (ஐந்து ஆகாயங்களின்) லக்ஷணத்தை விரிவாகச்சொல்லவேண்டுமென்று கேட்டார். அவர் சொன்னதாவது: ஆகாசம், பராகாசம், மகாகாசம், சூர்யாகாசம், பரமாகாசமென ஐந்து உண்டு. உள்ளும் புறமும் இருள் மயமாயிருப்பது ஆகாசம், உள்ளும் புறமும் பிரளயகாலத்து அக்கினியைப்போல்வது பராகாசம், உள்ளும் புறமும் அளவிடக்கூடாத பிரகாசத்தைப் போல்வது தத்துவ மகாகாசம், உள்ளும் புறமும் சூரியனைப்போல்வது சூர்யாகாசம், வசனிக்கக்கூடாத ஜ்யோதியாய் சர்வவியாபகமானதும், நிரதிசயாநந்தலக்ஷணமுள்ளதும் பரமாகாசம். இவ்விதம் அந்தந்த லக்ஷியத்தைப் பார்ப்பதால் அந்தந்தமயமாகிருன்.

‡ விஷயங்களினின்றும் அந்தக்கரண விருத்தியை விசாரத்துவாரா நிக்கிரகம்செய்து விருத்தி எழும் இடத்தை நாடிச் சாதகம் செய்யும் பரிபாக திசையில் இந்திரியங்களின் அடக்கம் உண்டாகி ஆண்டு நிகழும் அகண்டாகார விருத்தி விளக்கத்தால் உண்டாகும் ஆனந்தானுபவத்தில் சித்தவிருத்திலயம் நிரந்தரம் நிலை பெற்றிருக்கும் சமாதியனுபவத்தால் நிவாததீபம் போல் சலனமற்ற சத்தாசாமானிய வடிவாகிய பிரஹ்ம ஸ்திதியை அடைகிருன்.

† இது சூக்ஷ்ம காரண மகாகாரண சரீரங்களைக் குறிக்கும்.

ஒன்பது சக்கரங்களையும், ஆறு ஆதாரங்களையும், மூன்று லக்ஷியங்களையும், ஐந்து ஆகாசங்களையும் எவன் நன்ருய் அறியவில்லையோ அவன் பேருக்கு மாத்திரம் யோகியாவான் (உண்மையான † யோகியாக மாட்டான்).

நான்காவது பிராஹ்மணம் முற்றிற்று.



## V. வது பிராஹ்மணம்.

விஷயங்களோடு கூடியமனம் பந்தத்துக்கும், நிர்விஷயமான (விஷயங்களற்ற) மனம் முக்திக்கும் காரணமாகும். சகல ஜகத்தும் சித்தத்தை ஆதாரமாக உடையது. சித்தம் (மனம்) நிராசிரயமாக (தாக்கற்றதாக) மனோன்மனி அவஸ்தையை யடையப் பக்குவமானதாகவும், லயமாகத்தகுந்ததாகவும் செய்யவேண்டும். அதன்லயத்தைப் பரிபூரணமான வென்னிடத்து அப்பியாசஞ் செய்யவேண்டும். மனோலயத்துக்குக் காரணம் நானே. அநாஹதமான (அடிக்கப்படாத, அல்லது அநாஹத சக்கரத்திலுண்டான) சப்தமெதுவோ, அந்தச் சப்தத்திற்குள் துவனியெனப்பெயர்: அந்த துவனியின் உள்ளிருப்பது ஜ்யோதியாகும்: அந்த ஜ்யோதியின் உள்ளிருப்பது மனம் (சுத்தமனம்). அந்தமனம் மூன்று லோகங்களினுடைய (ஸ்தூல சூக்ஷ்ம காரண லோகங்களுடைய) சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் என்கிற வேலையைச்செய்யும். அம்மனம் எவ்விடத்தில் லயமடைகிறதோ ‡ அதுவே விஷ்ணுவின் பரமபதம்.

§ அதன் (அம்மனதின்) லயத்தினுல் (பேதங்களற்றுப்போவதால்) அத்வைதம் சித்திக்கும்.

இதுவே பரமதத்துவம் (உண்மை). அதை அறிந்தவன், பாலனைப்போலவும், பைத்தியம் பிடித்தவனைப்போலவும் பிசாசத்தைப்போலவும் லோகத்தில் சஞ்சரிப்பான்.

இவ்வித அமநஸ்காப்பியாசத்தால் நித்திய திருப்தி, மூத்திரமலங்கள் அல்பமாதல், மிதமான ஆகாரம், சரீரதிருடம் (பலம்), அஜாட்ய நித்திரை (அறிதுயில்), பார்வை வாயு இவைகளின் சலநமின்மை, பிரஹ்மதரிசநத்தா லுண்டாகிய சுகஸ்வரூபம் இவைகள் சித்தியாகும்.

இவ்விதம் வெகுகாலம் சமாதியில் உண்டாகும் பிரஹ்மாமிருதத்தைப் பானம் செய்வதே தொழிலாயிருப்பவன் சன்னியாசியாகவும் பரமஹம்ஸனுகவும், அவதூதனுகவுமாகிருன்.

அவன் பார்வையால் சகல சகத்தும் சுத்தமாகும்: அவனைச் சேவிப்பதில் (ஊழியம் செய்வதில்) ஊக்கமுள்ளவன் அறிவில்லாதவனுனுலும் முக்தனுகிருன். அவனுடையகுலத்தை நூறு தலைமுறைவரையில் (சம்சாரத்தைத்) தாண்டும்படி செய்கிருன். அவனுடைய தாய்தகப்பன் குழந்தைகள் இவர்களின் வர்க்கங்கள் எல்லாரும் முக்தராகிருர்கள். இவ்விதம் உபநிஷத்.

ஐந்தாவது பிராஹ்மணம் முற்றிற்று.

மண்டலப் பிராஹ்மணோபநிஷத்து முற்றிற்று.



மு. கோ - நாராயணசாமி அய்யர்.

† நவசக்ர ஷடாதாரம் த்ரிலக்ஷ்யம் வ்யோமபஞ்சகம் ।
ஸம்யகேதந்ந ஜாநாதி ஸ யோகீ நாமதோ பவேத் ॥

‡ இவ்விடத்தில் விஷ்ணுவென்ருல் சர்வவியாபியான வஸ்துவாகிய பிரஹ்மம் என்றுபொருள்.

§ அநாஹதஸ்ய சப்தஸ்ய தஸ்ய சப்தஸ்ய யோ த்வநி: ।
த்வநேரந்தர்கதம் ஜ்யோதி: ஜ்யோதிரந்தர்கதம் மந: ॥
யந்மநஸ்த்ரிஜகத்ஸ்ருஷ்டிஸ்திதிவ்யஸநகர்மக்ருத் ।
தந்மநோ விலயம் யாதி தத்விஷ்ணோ: பரமம் பதம் ॥